*அர்த்தம் நிலையாக இருத்தல் என்று லட்சியார்தத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். இங்கு ஸத்யம் என்பது ஸத்-இருத்தல் என்பதைக் குறிக்கின்றது. காரணம் எப்போதும் ஸத்யம், காரியம் மித்யா.*

*களிமண்ணிலிருந்து உருவான பொருட்கள் அனைத்தும் மித்யா, களிமண் ஸத்யமாக, காரணமாக இருக்கின்றது. அதேபோல இந்த பிரபஞ்சத்திற்கு காரணமாக இருப்பது பிரம்மன், எனவே அது ஸத்யமாக இருக்கின்றது.*

***ஞானம் பிரம்மஹ:-***
*************************

*பிரம்மன் ஸத்யமாகவும் இருக்கின்றது அதே சமயம் அறிவு ஸ்வரூபமாகவும் இருக்கின்றது. வாச்யார்த்தமாக பார்க்கும் போது ஞானம் என்பது மனதில் வரும் ஒன்றை பற்றிய அறிவு.*

*இதற்கு விருத்தி ஞானம் என்று அழைக்கப்படும்.*

*மனதில் தோன்றும் ஒரு பொருளைப்பற்றிய எண்ணம். நம் மனதில் தோன்றும் எண்ணங்கள் இரண்டு அம்சங்களாக உள்ளது.*

*1. அறிவு (சித்)*
*2. நாம-ரூபங்கள் (பொருட்கள்) (அ) எண்ணங்கள் (விஷயங்கள்).*

*இதில் அறிவானது எல்லா நிலைகளிலும் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கின்றது. எனவே இதுவே பிரம்மத்தின் ஸ்வரூபமாக லட்சணமாக புரிந்து கொள்ள வேண்டும்.*

*எல்லா எண்ணங்களுக்கும் சாட்சியாக இருப்பது, எல்லா அறிவுக்கும் அறிவு ஸ்வரூபமாக இருக்கின்றது.*

***அனந்தம் பிரம்மஹ:-***
***************************

*அனந்தம் என்பது எல்லையற்றது, பூரணமானது, வரையறுக்கப்படாதது என்று பொருட் கொள்ளப்படுகிறது.*

*இந்த வாச்யார்த்தமே அதன் ஸ்வரூபத்தை உறுதிபடுத்துகிறது. ஒரு பொருள் மூன்று விதத்தில் வரையறுக்கப்படலாம். அவைகள் இடம், காலம், மற்றும் வேறொன்றினால்.*

1. *தேச பரிச்சேதஹ – ஒரு பொருள் தேசத்தினல் வரையறுக்கப்படும். அதாவது ஒரு பொருள் ஒரே நேரத்தில் வெவ்வேறிடத்தில் இருக்க முடியாது.*

2. எல்லாப்பொருட்களுக்கும் தோற்றம்-மறைவு இருப்பதால் அவைகள் காலத்தால் வரையறுக்கப்பட்டிருக்கின்றது.

3. ஒரு பொருளுக்கு குணங்கள் கொடுக்க கொடுக்க அதனுடைய வியாபிக்கும் விஸ்திரம் குறைந்து கொண்டே போகும்.

உதாரணமாக வெறும் மனிதர்கள் என்று கூறும்போது உலகிலுள்ள எல்லா மனிதர்களை குறிக்கும். இந்தியர்கள் என்று சொல்லும் போது இந்தியாவில் வசிக்கும் மக்களை மட்டும் குறிக்கின்றது. தமிழர்கள் என்று சொல்லும்போது தமிழ்நாட்டில் வசிப்பவர்களை மட்டும் குறிக்கின்றது. இவ்வாறு எண்ணிக்கை குறைந்து கொண்டே போகின்றது.

பிரம்மத்தை தவிர வேறொரு பொருள் இருந்தால் அது வரையறுக்கப்பட்டதாகி விடும்.

அது வரையறுக்கப்படாதது என்றால் அதைத் தவிர்த்து வேறொன்றும் இல்லை என்று நிரூபிக்க வேண்டும்.

ஸத்துக்கு (உண்மைக்கு) வேறாக இருக்கின்றது என்றாலே அதை அஸத் (பொய்) என்று எடுத்துக்

*கொண்டால் அது மாதிரி ஒன்றில்லை புரிந்து கொள்ளலாம்.*

*ஸத்தும் அல்ல, அஸத்தும் அல்ல என்ற நிலையையே மித்யா என்று கூறப்படுகின்றது.*

*இந்த பிரபஞ்சம் மித்யா அது இருப்பது போல காட்சியளித்துக் கொண்டிருக்கின்றது. அதனால் இந்த பிரம்மத்தை ஒன்றும் செய்ய முடியாது எப்படி கயிற்றில் தோன்றும் பாம்பினால் கயிற்றுக்கு எந்த பாதிப்பும் இல்லையோ அது போல.*

*இந்த மூன்று குணங்களை உடையதாக இருப்பது இந்த பிரம்மம்.*

*அனந்தம் என்பது முடிவற்று இருத்தலையே குறிக்கின்றது. நாம் அடைய வேண்டிய அறிவுதான் இந்த அனந்தம். இதை தெளிவாக உறுதியுடன் புரிந்து கொள்ள வேண்டும். இந்த அனந்தம் முழு மன நிறைவு என்றும் புரிந்து கொள்ளலாம்.*

*பிரம்மத்தை எப்படி, எங்கே, எதுவாக அறிய வேண்டும். என்ற வினவினால் அதை ஸத்யம், ஞானம், அனந்தமாக அறிய வேண்டும், தன்னுடைய புத்தியில், மனதில் அறிய வேண்டும், நானாக அறிய வேண்டும் என்று பதிலளிக்கப்படுகின்றது.*

***யோ வேத நிஹிதம் கு3ஹாயாம் பரமே வ்யோமன் ஸோஷ்னுதே ஸர்வான் காமான் ஸஹ ப்ரஹ்மணா விபஸ்சிதேத்***

*எவனொருவன் பிரம்மத்தை மேலான ஹ்ருதய ஆகாசத்திற்குள் இருக்கின்ற அந்தக்கரணத்திற்குள் இருப்பதாக அறிகின்றானோ அவனுக்கு ஆசைப்படுகின்ற எல்லா பொருட்களையும் அடைந்தவனாகின்றான்.*

*இவன் அறிவு ஸ்வரூபமான பிரம்மனாக இருந்து உடனடியாக எல்லா ஆசைகளையும் நிறைவேற்றிக் கொண்டவனாக இருக்கின்றான். பிரம்மத்தை அறிந்தவன் அதுவாகவே இருப்பதால், எல்லா ஜீவராசிகளுக்குள்ளும் இருப்பதால் ஒரே சமயத்தில் எல்லா ஆசைகளையும் நிறைவேற பெற்றவனாகின்றான்.*

*மனதில் இருப்பிடமாக நம்முடைய ஹ்ருதயத்திலுள்ள ஆகாசம் இருக்கின்றது. புத்திக்கு குஹா என்று கூறக்காரணம், அந்தக் காலத்தில் மனிதன் புதையலை குகைக்குள் ஒளித்து வைத்திருந்ததை போல,போகமும், மோட்சமும் இந்த புத்தியில் மறைத்து வைக்கப்பட்டிருப்பதால் இவ்வாறு குறிப்பிடப்படுகின்றது.*

*பிரம்மத்தை அறிபவனாக (பிரமாதாவாக) அறிய வேண்டும். அறியப்படும் பொருளாக (பிரமேயமாக) அறியக்கூடாது.*

*நம் புத்தியில் பிரம்மத்தை தவிர எல்லாவற்றையும் அறியப்படும் பொருளாகத்தான் அறிகின்றோம். பிரம்ம அறியப்படும் பொருளாக இல்லாததற்கு நான்கு காரணங்கள் இருக்கின்றது.*

__அவைகள்__

1. *அது எதனாலும் வரையறுக்கப்படாதது.*

2. *அது இருமையற்றதாக இருப்பதால், பிரமேயமாக அறிய முடியாது. இருமை முதலில் அறிபவன், அறியப்படும்பொருள் என்பதிலிருந்துதான் தொடங்குகிறது. நேஹ நானாஸ்தி கிஞ்சன என்ற உபநிஷத் வாக்கியம் இதை புரிய வைக்கின்றது.*

3. *இதன் ஸ்வரூபம் அறிபவனாக இருப்பதால் அது அறியப்படும் பொருளாக இருக்க முடியாது.*

4. *சேதனவாத் – அறிவு ஸ்வரூபமாக இருப்பதால் அறியப்படும் பொருளாக இருக்க முடியாது.*

*எப்பொழுதும் எது அறியப்படுகின்றதோ அது ஜடமாகத்தான் இருக்க முடியும்.*

**கேள்வி**

*பிரம்மன் ஏன் இரண்டாக இருக்க கூடாது? நான் என்னையே (ஸ்தூல உடலை) பார்க்கின்றேனே!!!*

**பதில்**

*இந்த உடல் நீயல்ல என்று தெரிந்துக்கொள், பிரம்மன் அவயங்களற்றது எனவே சாத்தியமல்ல. எனவே பிரம்மன் அறியப்படும் பொருள் அல்ல என்று திடமான அறிவை அடைய வேண்டும்.*

**கேள்வி**

*பிரம்மன் அறிபவனாக (பிரமாதாவாக) இருக்க முடியாதா?*

**பதில்**

*அறிபவன் என்றும் சொல்ல முடியாது. அப்படி சொன்னால் அதில் குறையுண்டு. அறிபவன் விதவிதமான பொருட்களை அறியும் போது அவனிடத்தில் மாற்றம் இருந்து கொண்டே இருக்கும். எனவே இது மாற்றத்திற்கு உட்பட்டதாக இருக்கின்றது.*

*சாஸ்திரத்தில் இரண்டு வகையான அறிபவன்கள் கூறப்பட்டிருக்கின்றது.*

*அவைகள்*

1. *நம்முடைய புத்தி – இதுதான் எண்ணங்களினால் மாற்றங்கள் அடைந்து அறிவை அடைகின்றது. சிதாபாஸத்தின் உதவியால் இது நடைபெறுகின்றது.*

2. *சாஸ்திரத்தின் உபதேசப்படி புத்தியும் ஜடம்தான், ஆனால் அறிவுடன் எப்படி செயல்படுகின்றது. இந்த புத்தியை அறிந்து கொண்டிருப்பவன் இன்னொரு பிரமாதா. இந்த ஆத்மா என்ற பிரமாதாவிற்கு புத்தியானது அறியப்படும் பொருளாகின்றது. புத்தியானது விகாரமடைந்து பிரமாதாவாக இருக்கின்றது. ஆத்மாவானது நிர்விகாரமாக இருந்து கொண்டு பிரமாதாவாக இருக்கின்றது. எனவே அறிபவன் நான் என்று சொல்லும்போது புத்தியை புரிந்து கொள்ளாமல் அதை பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஆத்மாதான் அறிபவன் என்று புரிந்து கொள்ள வேண்டும்.*

*விசாரம்:-*
*---------*

**கேள்வி**

*எங்கும் இருக்கின்ற பிரம்மத்தை எப்படி அடைய முடியும்?*

*பதில்*

*ஒன்றை அறியாமலிருந்தால் அதை அடையாமல் இருத்தலாகும், அதே சமயம் அதை அறிந்து கொண்டால் அதை அடைந்தவனாகின்றான். உதாரணமாக பத்தாவது மனிதனை தெரிந்தவுடன் அவனை அடைந்தவனாகின்றான்.*

*(ஒரு ஆற்றை கடந்த 10 நபர்கள் ஆற்றின் மறு கரையை அடந்த உடன் அவர்களை எண்ணிப்பார்க்கின்றனர். எண்ணிக்கையில் எண்ணுபவன் தன்னை விட்டு விட்டு மீதமுள்ள 9 நபர்களை மட்டுமே எண்ணிவிட்டு ஒருவனை காணவில்லை என்பது கருத்து)*

*எல்லா பொருட்களையும் அடைந்து விட்டான் என்பதற்கு அவன் முழு மனநிறைவை அடைந்து விட்டான் என்று புரிந்து கொள்ள வேண்டும். நானேதான் எல்லா ஜீவராசிகளுக்குள்ளும் இருந்து கொண்டு எல்லா ஆசைகளையும் அனுபவித்துக்*

*கொண்டிருக்கின்றேன். நம்மிடத்தே இருக்கும் பொறாமை, கோபம் நமக்கே தெரியாமல் இருக்கும். வெளிப்பட வேண்டிய நேரத்தில் நம்மையும் மீறி வெளியே வந்து நம்மை துயரத்தில் ஆழ்த்தி விடும், மூடனாக மாற்றி விடும், தகாத செயலுக்கு தூண்டி விடும்.*

*அவனுடைய மனதிலிருக்கும் எல்லா ஆசைகளும் நீக்கப்படுகின்றது. உதாரணமாக கார் வாங்க வேண்டும் என்ற ஆசை அதை வாங்கியவுடன் அதன் மீதுள்ள ஆசை நீங்கி விடுகின்றது. அதேபோல பணத்தை அடைய வேண்டும் என்ற ஆசை அதை அடைந்ததும் நீங்கிவிடுகின்றது. இவ்வாறு எல்லா பொருட்களும் அவைகளை அடைந்தவுடன் நீங்கிவிடுகின்றன.*

*ஆத்ம ஞானத்தால் எல்லா ஆசைகளும் நீங்கி விடும்.*

*ஆசை எழுவதற்கு காரணம் மனதிலுள்ள நிறைவற்ற நிலை. இந்த மனநிறைவற்ற தன்மைக்கு காரணம் நம் உடல், மனம், புத்தியில் இருக்கின்ற நான் என்ற அபிமானத்தினால்தான். இந்த சரீரத்தின் தேவைகள், மனதின் தேவைகள் என்னுடையதாகின்றது. இந்த தேவைகள் எப்பொழுதும் இருந்துக் கொண்டுதான் இருக்கும். இதனால்தான் நம் மனம் எப்பொழுதும் மனநிறைவற்று இருக்கின்றது.*

*ஆத்மாவை பற்றிய அறியாமை இந்த மனநிறைவற்ற நிலையில் வைத்திருக்கின்றது, மனநிறைவற்ற நிலை ஆசைகளை உருவாக்குகின்றது.*

*எனவே ஆசைகளின் மூலமான அறியாமை நீங்கிவிட்டால் அவைகளும் நீங்கிவிடும். பசியானது சாப்பிட்டவுடன் நீங்கிவிடுவது போல, ஆசையானது ஆத்ம ஞானம் வந்தவுடன் நீங்கிவிடும்.*

*ஆசைகள் இரண்டு வகை*

1. *பந்தப்படுத்துகின்ற ஆசைகள்,*
2. *பந்தப்படுத்தாத ஆசைகள்.*

*எந்த ஆசையும் நிறைவேறினாலும், நிறைவேறாவிட்டாலும் மனநிறைவுடன் இருப்போம். எந்த ஆசைகள் நிறைவேறாவிட்டால் நாம் துயரம் அடைகின்றோமோ அவைகள் முதல் வகையான ஆசை.*

*பிராரப்த கர்ம்மானது சரீர அபிமானத்தில் வைத்திருக்கும், ஆனால் சரீரத்திற்கு வரும் நலம், கேடு அவனை பாதிப்பதில்லை.*

*ஞானியிடத்து வரும் ஆசையானது ஈஸ்வரனின் சங்கல்பமாக இருக்கும்.*

*இவ்விதம் ரிக் மந்திரம் முடிவடைகின்றது. சூத்திரம் என்பது சுருக்கமான வாக்கியம், விருத்தி என்பது சுருக்கமான விளக்கம், வியாக்யானம் என்பது விரிவான விளக்கம்.*

***அனுவாகம் – 1.2***
===============

*இதில் பிரம்மத்தை பற்றி விரிவாக விளக்கப்படுகின்றது. அத்யாரோப அபவாத நியாயம் என்ற முறையில் சிஷ்யர்களுக்கு விளக்கப்படுகின்றது.*

*அத்யாரோபம் என்பது தெரிந்தே ஒன்றின் மீது வேறொன்றை ஏற்றி வைத்தல், அபவாதம் என்பது ஏற்றி வைத்ததை இல்லையென்று நீக்கி விடுதல். அத்யாஸம் என்பது அறியாமையினால் ஒன்றின் மேல் வேறொன்றை பார்த்தல்.*

*அத்யாரோபம் ஏன் செய்ய வேண்டும் என்றால், ஒரு பொருள் ஏற்கனவே தவறாக புரிந்து கொள்ளப்பட்டிருப்பதால் அதை விளக்க வேண்டுமென்றால் முதலில் தவற்றை புரிய வைக்க வேண்டும், பிறகு சரியானதை அறிய வைக்க வேண்டும்.*

*உதாரணமாக கயிற்றில் பாம்பை பார்த்து கொண்டிருப்பவனுக்கு முதலில் பார்த்து*

*கொண்டிருக்கும் பாம்பு உண்மையானதல்ல என்று புரிய வைக்க வேண்டும், பிறகு அது கயிறு என்று அறிய வைக்க வேண்டும்.*

*அதாவது பாம்பு இருப்பதை ஏற்றுக் கொண்டு பிறகு அது பாம்பு காட்சியளிக்கும் கயிறு என்று உபதேசிக்க வேண்டும். ஒருவனிடத்தில் இருக்கும் விபரீத ஞானத்தை போக்குவதற்கு இந்த முறையை தவிர வேறொன்றும் இல்லை.*

*அதேபோல நாம் அனுபவிக்கும் இந்த பிரபஞ்சத்தை இருக்கின்றது என்று ஒத்துக் கொண்டு அதை பிரம்மத்தில் ஏற்றி வைத்து பிறகு அதை நீக்குகின்றது.*

*பிரம்மம் பிரஞ்சத்திற்கு ஆதாரம் என்று முதலில் ஏற்றி வைக்கின்றது அதாவது முதலில் இவ்வாறு அத்யாரோபம் செய்கின்றது.*

*பிரபஞ்சத்திற்கு காரணமாக பிரம்மத்தை சொல்கின்றது. அதனால் அடையும் பயன்கள் கீழே கொடுக்கபட்டுள்ளன.*

*1. பிரம்மன் சத்யம் என்பது நிலை நாட்டப்படும். சத்யமாக இருப்பது மூன்று காலத்திலும் இருக்கும். களிமண் – காரணம் – ஸத்யம். பானையின் தோற்றத்துக்கு முன்னும், இருக்கும்போதும், உடைந்த பிறகும் களிமண் இருந்து கொண்டு இருக்கும்.*

*2. பிரம்மன் அனந்தம் என்று நிலை நாட்டப்படும். தேச, கால, வஸ்துவினால் வரையறுக்கபடாதது.*

*a.* *தேசத்தினால் வரையறுக்கப்படாதது – பிரம்மத்திலிருந்து முதலில் தோன்றியது ஆகாசம், இதிலிருந்து பிரம்மன் தேசத்தினால் வரையறுக்கப்பட முடியாதது என்று புரிந்து விடும்.*

*b.* *காலமும் பிரம்மத்திலிருந்து தோன்றியதால், அதனாலும் வரையறுக்கப்பட முடியாதது.*

*c.* *குணங்கள் அதிகமாகும்போது அதன் வியாபிப்பு குறைகின்றது. குணங்கள் உள்ள பொருட்கள் எல்லாம் வரையறுக்கப்படலாம்.*

*3. காரண காரியம் என்று சேரும்போது காரணத்தை மட்டும்தான் இருக்கின்றது என்று கூறமுடியும். பிரம்மன் காரணம், பிரபஞ்சம் காரியம். இரண்டும் ஒன்று என புரிந்து கொண்டால் அங்கு பிரம்மன் மட்டும்தான் இருக்கும். அதற்கு வேறாக ஒன்றும் இல்லை. எனவே வஸ்துவால் வரையறுக்க முடியாது.*

*4. அத்யாரோப முறையை பயன்படுத்துவதற்கு உதவும்.*

*5. அத்வைதமானது நிலை நாட்டப்படுகின்றது. உதாரணமாக பானைகள் பலவாக இருந்தாலும் அவைகள் மித்யாவாக இருப்பதால் அதற்கு ஆதாரமான களிமண் மட்டும் இருப்பது உண்மை போல, ஜகத் மித்யாவாக (மாயையாக) இருக்கின்றது, பிரம்மன் ஒன்றுதான் இருக்கின்றது.*



*பிரம்மமானது மாற்றமடையாமல் இந்த ஜகத்திற்கு காரணமாக இருப்பது மாயையின் சக்தியால்தான். இந்த மாயை இல்லாத ஒன்றை இருப்பதாக காட்சியளிக்க செய்வது அதன் சக்தி. இது பிரம்மத்தின் சக்தியாக இருக்கின்றது. மாயையுடன் கூடிய பிரம்மம்தான் ஈஸ்வரன் என்று அழைக்கப்படுகின்றது.*

*காரணம் இரண்டு வகையாக இருக்கின்றது.*

<u>அவைகள்</u>

*1. உபாதான காரணம், 2. நிமித்தக் காரணம்.*

இங்கே பிரம்மனானது உபாதான காரணமாக அறிமுகப்படுத்தப் படுகின்றது.. ஸ்ருஷ்டி முதலில் சூட்சுமமாக வரும் பிறகு அதிலிருந்து ஸ்தூலமான படைப்புக்கள் தோற்றுவிக்கப்படும். இங்கு இரண்டும் சேர்ந்து தோன்றுவதாக கூறப்படுகின்றது.

**மந்திர விளக்கம்**

----------------

பிரம்மதினிடமிருந்து, ஆத்மாவாக அறியப்படுகின்ற இதனிடமிருந்து ஆகாசம் தோன்றியது. மாயையுடன் சப்த குணத்தை சேர்த்து ஆகாசமாக தோன்றுகிறது. இங்கு ஈஸ்வரனே ஆகாசமாக காட்சியளிக்கின்றார்.

உபாதான காரணமே காரியமாக காட்சியளித்து கொண்டிருக்கும், ஆகாசத்துடன் ஸ்பர்சம் என்ற குணத்தை சேர்த்தவுடன் வாயு உருவாகின்றது. இப்போது ஈஸ்வரன் வாயுவாகவும் காட்சியளிக்கின்றார். வாயுவிடமிருந்து அக்னியானது தோன்றியது, உருவம் என்ற குணம் இதனுடன் சேர்ந்திருக்கின்றது. அக்னியிடமிருந்து நீர் தோன்றியது, இதனுடன் சுவை என்ற குணம் இருக்கின்றது. நீரோடு மணம் என்ற குணம் சேர்ந்தவுடன் நிலமாக தோன்றியது.

நிலத்திலிருந்து தாவரங்கள் தோன்றியது, தாவரங்களிலிருந்து உணவு தோன்றியது. உணவிலிருந்து ஜீவராசிகளின் ஸ்தூல சரீரம் தோன்றியது. ஈஸ்வரனே ஜீவராசிகளின் ஸ்தூல

உடலாக காட்சியளிக்கின்றார். தன்னுடைய ஸ்வரூபத்தை இழக்காமல் மாயையின் சக்தியால் இவ்வாறெல்லாம் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றது இந்த பிரபஞ்சம்.

**அனுவாகம் – 1.3**

===============

இதில் அபவாதம் செய்யப்பட்டுள்ளது. அபவாதம் என்றால் நிராகரித்தல், நீக்குதல், ஒடுக்குதல். அத்யாரோபம் – காரணம் + நாமரூபம் = காரியம். சூக்ஷமத்திலிருந்து ஸ்தூலமாக மாறுதல்.



அபவாதம் = காரணம் = காரியம் – நாமரூபம், ஸ்தூலத்திலிருந்து சூக்ஷமை நிலைக்கு மாற்றுதல். ஸத்தை ஒரிடத்திலிருந்து வேறொன்றிற்கு மாற்றுதல். உதாரணமாக பஞ்சுவிலிருந்து நூல், பிறகு துணி, பிறகு தைக்கப்பட்ட விதவிதமான ஆடைகள் இருக்கின்றன. ஆடை இருக்கின்றது என்பதில் உள்ள இருத்தலை துணிக்கு கொடுத்து விட்டால் துணி இருக்கின்றதாகி விடும், பிறகு நூல் இருக்கின்றது – பஞ்சு இருக்கின்றது.

*அதேபோல பிரம்மனிலிருந்து ஆகாசம், பிறகு வாயு, பிறகு அக்னி, பிறகு நீர், பின்பு ப்ருதிவி, இவைகளிலுள்ள இருத்தல் கடைசியில் பிரம்மத்தை அடைகின்றது. இந்த அபவாதம் மனதில்தான் நடக்கும். காரியம் இருக்கின்றது என்று சொல்வதை விட்டுவிட்டு காரணம் இருக்கின்றது என்று சொல்வதுதான் அபவாதம்.*

*காரியமான ஆடையில் இருக்கும் ஸத்தை துணிக்கு கொடுக்கும்போது ஆடையில் இருத்தலை நிஷேதம் செய்யப்படுகின்றது. இப்படியே அந்த இருத்தல் கடைசியில் மூலக்காரணமான பஞ்சுக்கு சென்று விடும். அதுபோல கிரமமாக தோற்றுவிக்கப்பட்டிருக்கும் ஸ்ருஷ்டியை அதே கிரமத்தில் நிஷேதம் (நீக்குதல்) செய்துக் கொண்டு சென்றால் பிரம்மத்தை அடைவோம்.*

*இந்த அபவாதம் பஞ்ச கோசங்களை வைத்து செய்யப்படுகின்றது. ஸ்தூல சரீரம் அன்னமய கோஷம் என்றும், சூட்சும சரீரம் ப்ராண மய, மனோ மய, விக்ஞான மய கோஷங்கள் என்றும், காரண சரீரம் ஆனந்த மய கோஷம் என்றும் பிரிக்கப்பட்டு இருக்கிறது.*

*ஆத்மாவானது இந்த கோஷங்களால் மறைக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஐந்து நிலைகளில் நான் என்று புத்தியானது அபிமானம் கொண்டு ஆத்மாவை அறிய விடாமல் செய்கின்றது.*

*ஏன் பஞ்சபூதங்கள் வழியாக அபவாதம் செய்யாமல் ஐந்து கோஷங்களின் மூலமாக அபவாதம் செய்யபட்டு பிரம்ம ஞானமானது கொடுக்கப்படுகின்றது?*

*பஞ்ச பூதங்களை வைத்து அபவாதம் செய்தால் வெளியே உள்ள விஷயமாக அறிந்து கொள்ள நேரிடும். பிரம்மத்தை தன்னிடத்திலுள்ள ஆத்மாவாக புரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புவதால் இவ்வாறு பஞ்ச கோஷத்தின் வழியாக அபவாதம் செய்யப்பட்டுள்ளது.*

*எந்தெந்த இடத்தில் நான் என்ற அபிமானம் இருக்கின்றதோ அவைகளை நீக்கித்தான் நமக்கு அறிவை புகட்ட வேண்டும் என்பதால் இந்த முறையை உபநிஷத் கையாண்டிருக்கின்றது. இவ்வாறு செய்யும்போது எவ்வளவு ஸ்தூல சரீரங்கள் இருக்கின்றதோ அவ்வளவு ஆத்மாக்கள் இருக்கின்றதா என்ற சந்தேகம் வந்துவிடும்.*

*அன்னமய கோஷமும், அன்னமய பிரபஞ்சமும் ஒன்றுதான் என்ற அறிவை கொடுத்து நம்முடைய ஸ்தூல சரீரத்தை நீக்கும்போது ஸ்தூல பிரபஞ்சத்தை நீக்கி விடுவோம். இவ்வாறு ஒவ்வொரு கோஷத்திற்கும் ஸமஷ்டி கோஷத்திற்கும் உள்ள ஐக்கியத்தை எடுத்துக்காட்டி இந்த சந்தேகமானது நீக்கப்படுகின்றது.*

*சமஷ்டி-வியஷ்டி ஐக்கிய விசாரம்:*
---------------------------------------

*இந்த இரண்டுமே ஒன்றுதான். பலமரங்கள் உள்ள இடத்திற்கு வனம் என்று கூறப்படுகின்றது. இந்த மரங்கள் அழிந்து விட்டால் வனம் இல்லாது போகும். அதுபோல மரம் போன்ற ஸ்தூல சரீரத்தை நீக்கினால் அதிலுள்ள அபிமான நீங்கி விடும். பிறகு சமஷ்டி பிரபஞ்சம் இல்லாமல் போய்விடும். கனவு நிலையில் இந்த ஸ்தூல சரீரத்தின் மேல் உள்ள அபிமானம் நீங்கி விடுவதால் இந்த பிரபஞ்சமே மறைந்து விடுகின்றது. ஆனால் சூட்சும ஸரீர அபிமானம் காரணமாக சூட்சும பிரபஞ்சம் தோன்றி விடுகின்றது.*

*ஒரு விஷயம் புரியவில்லையென்றால், அதையே திரும்ப திரும்ப விசாரம் செய்யும் போது கொஞ்ச கொஞ்சமாக நமக்கு புரிய தொடங்கும். இதற்கு உபாஸனம் என்று பெயர். இந்த முறையையும் உபநிஷத் விளக்குகின்றது. இந்த உபாஸனைக்கு ஆலம்பனமாக ஸ்தூல சரீரத்தை எடுத்துக் கொண்டு இந்த ஸ்தூல பிரபஞ்சத்தை (விராட் புருஷனை) தியானிக்க வேண்டும்.*

*இதேபோல ஒவ்வொரு கோஷமும் ஆலம்பனமாக இருக்கும் அதன் சமஷ்டியை தியானித்து இரண்டுக்குமுள்ள ஐக்கியத்தை புரிந்து கொள்ள வேண்டும்.*

*அனுவாக விளக்கம்:*
--------------------

*“ஸ வா எஷ புருஷோ அன்னரஸமய”*

*இது அன்னமய கோஷத்தை ஆத்மாவாக அறிமுகப்படுத்துகின்றது. இந்த ஆத்மாதான் அன்னமய கோஷமாக இருக்கின்றது. அன்னத்தை சுவைப்பதினால் அடைகின்ற ஸ்தூல உடல், அன்னமயமான மனித உடல் இதையை ஆத்மாவாக கற்பனை செய்யப்படுகின்றது.*

*ஆலம்பனத்தை தயார் செய்வதற்குதான் இந்த உடலை ஐந்தாக பிரிக்கப்படுகின்றது. அன்னமனமான இவனுக்கு தலையே தலைப்பாகம், வலது கை வலதுபாகம், இடது இடது பாகம், கழுத்திலிருந்து வயிறு வரை உள்ள பாகம் மத்திய பாகம், இடுப்பிலிருந்து பாதம் வரை உள்ள பாகம் இந்த உடலைத் தாங்கும் பாகம் என்று ஐந்தாக பிரிக்கப்படுகின்றது. அன்னமய விஷயத்தில் இனி வரும் ரிக் மந்திரம் விளக்குகின்றது.*

*அனுவாகம் - 2.1*
===============

***அன்னாத்வை ப்ரஜா: ப்ரஜாயந்தே | யா: காச்ச ப்ருதிவீக்ம் ச்ரிதா: | அதோ அன்னேனைவ ஜீவந்தி | அதைனதபியந்த்யந்தத: | அன்னக்ம் ஹி பூதானாம்***

**ஜ்யேஷ்ட்டம் | தஸ்மாத் ஸர்வௌஷமுச்யதே | ஸர்வம் வை தே அன்னமாப்னுவந்தி | யே அன்னம் ப்ரஹ்மோபாஸதே | அன்னக்ம் ஹி பூதானாம் ஜ்யேஷ்ட்டம் | தஸ்மாத் ஸர்வௌஷதமுச்யதே | அன்னாத் பூதானி ஜாயந்தே | ஜாதான்யன்னேன வர்தந்தே | அத்யதே அத்தி ச பூதானி | தஸ்மாதன்னம் ததுச்யத இதி ||**

*இதில் முதலில் அன்னமய வியஷ்டியும், சமஷ்டியும் ஒன்றுதான் என்று கூறுகின்றது. இந்த உடலும் மற்றனைத்து உடல்களும் ஒன்றுதான் என்று உபாஸனை செய்ய வேண்டும் என்று உபதேசிக்கப்படுகின்றது.*

*இங்கு அன்னம் – சமஷ்டி, அன்னமயம் – வியஷ்டி அன்னத்திலிருந்து (விராட்) தனித்தனி அன்னமய கோஷம் தோன்றியது. அதாவது இந்த பூமியை சார்ந்திருக்கின்ற அனைத்து விதமான உயிரினங்களும் தோன்றியது. அவைகள் உணவினாலேயே காக்கப்பட்டு வருகின்றது. வாழ்வின் முடிவில் இந்த சமஷ்டி அன்னத்தையே அடைகின்றது. இந்த சமஷ்டி உடலும், வியஷ்டி உடலும் ஒன்றுதான் என்ற கருத்தை புரிந்து கொள்ள வேண்டும். ஈஸ்வரன் உலகிலுள்ள அனைத்து ஜீவராசிகளிலும் தானாகவே இருக்கின்றார் என்றும் புரிந்து கொள்ள வேண்டும்.*

**அனுவாக விளக்கம்:-**
-------------------

*விராட், இந்த ஸ்தூல பிரபஞ்சம் எல்லா ஜீவராசிகளுக்கும் காரணமாக, முதன்மையாக இருக்கின்றது. எனவே உணவே எல்லா ஜீவராசிகளுக்கும் மருந்தாக சொல்லப்-படுகின்றது. யார் உணவை பிரம்மனாக உபாஸிக்கின்றார்களோ அவர்களுக்கு அனைத்து விதமான உணவுகளையும் அடைகின்றார்கள். நிஷ்காம பலனானது இந்த உடலின் மீதுள்ள அபிமானம் சென்றுவிடும். உணவினால் தோன்றி, அதனாலே காக்கப்பட்டு கடைசியில் அதினிடத்தே லயம் அடைகின்றது, உணவாகவே மாறி விடுகின்றது. அன்னம் என்ற சொல் "அத்" என்ற மூலச் சொல்லிலிருந்து வந்தது என்று இப்போது விளக்கப்படுகின்றது. எவைகள் எல்லாம் நம்மால் சாப்பிடப்படுகின்றதோ அவைகள் அன்னம் என்று கூறப்படுகின்றது. இறந்தபிறகு இந்த ஸ்தூல சரீரத்தை பூதங்களால் சாப்பிடப்படுதல் அன்னம் என்று சொல்லப்படுகின்றது. இவ்வாறு ரிக் மந்திரத்தால் விளக்கப்படுகின்றது.*

**அனுவாகம் - 2.2**
===============

***தஸ்மாத்வா ஏதஸ்மாதன்ன ரஸமயாத் | அன்யோ அந்தர அத்மா ப்ராண மய: | தேனைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ | தஸ்ய புருஷவிததாம் | அன்வயம் புருஷவித: | தஸ்ய ப்ராண ஏவ சிர: |***

*வ்யானோ தக்ஷிண: பக்ஷ: | அபான உத்தர: பக்ஷ: | ஆகாச ஆத்மா | ப்ருதிவீ புச்சம் ப்ரதிஷ்ட்டா | தத்ப்யேஷ ச்லோகோ பவதி ||*

*முன்னே சொல்லப்பட்ட அந்த அன்னமயத்திலிருந்து வேறாகவும் ஸ்தூல சரீரத்திற்கும் உள்ளேயும் இருக்கின்ற பிராணமயம்தான் ஆத்மா.*

*விசாரம்:-*
*---------*

*சமஷ்டியாக இருக்கின்ற வியஷ்டியாகவும் இருக்கின்ற அன்னமயத்திலிருந்து வேறாக ஸ்தூல உடலுக்குள் இருக்கின்ற பிராணமயம்தான் ஆத்மா என்று சொல்லும் போது அன்னமய கோஷம் ஆத்மா இல்லை யென்றாகின்றது, அது மித்யாவாகவும் காரிய-மாகவும், அனாத்மாவாகவும் உள்ள நிலைக்கு சென்று விடுகின்றது. அன்னமயம் ஆத்மாவல்ல என்று உறுதி செய்து அதைக்காட்டிலும் வேறாக ஒன்றை சொல்லுகின்றது.*





*இது அன்னமயத்தை விட ஆத்மாவுக்கு அருகிலும், சூட்சுமமாகவும், அதிகமாகவும் வியாபித்து இருக்கின்றது. ஒரு பொருள் சூட்சுமமாகும் போது அதிகமான இடத்தை வியாபிக்கும். இது அன்னமயத்தைக் கட்டுப்படுத்தும் நிலையில் இருக்கின்றது. ஸ்தூல உடல் சரியில்லை யென்றால் பிராணனை சரி செய்தால் அது உடலை நல்ல நிலைக்கு கொண்டு வரும்.*

*ஆத்மா என்ற சொல் தோன்றிய விதம். இது அத3 என்ற வினையடியிலிருந்து வந்திருக்கின்றது. ஆத்மா என்றால் வியாபித்தல், ஆதாரமாக இருத்தல், பார்த்துக் கொண்டிருத்தல் (சாக்ஷி), என்றும் இருத்தல் என்று பல அர்த்தங்களை குறிக்கின்றது.*

*அன்னமய கோஷம் ஆத்மாவல்ல என்று சொல்லும்போது அன்னத்தை அதாவது இங்கு எல்லா ஸ்தூல சரீரங்களையும் சேர்த்து புரிந்து கொள்ள வேண்டும்,. அதேபோல நம்முடைய பிராணமயமும், சமஷ்டி பிராணமயமும் ஒன்றுதான் என்று புரிந்து கொள்ள வேண்டும்.*

*இந்த அறிவு ஏற்படவில்லையென்றால் இதை உபாஸனை செய்து அடைய வேண்டும். ஆலம்பனமாக இந்த உபாஸனையில் இருப்பது பிராணமயம், ஆனால் இது கண்ணுக்கு தெரியாமல் இருப்பதால் இதற்கு உருவத்தைக் கொடுக்கின்றது உபநிஷத்.*

*பிராணன் உடலுக்கு செல்வதால் அது உடலின் உருவத்தை அடைவதாக எண்ணிக் கொள்ள வேண்டும், பிராணன் ஐந்து வகையாக இருக்கின்றது. பிராணமயம் உடலாக இருக்கின்றது. இதில் வெளியே விடும் மூச்சுக்காற்றான பிராணன் தலைப்பாகமாகவும், வியானன், (சக்தியை, ரத்தத்தை உடல் முழுவதும் எடுத்துச் செல்கின்ற காற்று) உடலின் வலதுபாகம், அபானன் (உடலிலிருந்து வெளியேறும் காற்று) உடலின் இடது பாகமாகவும், சமானன் (சாப்பிடுகின்ற உணவை செரிக்க உதவுவது) நடுப்பாகமாகவும்,உதானன் (எதிர்மறையாக வேலை செய்வது, வாந்தி வருவது, கண்ணில் நீர் வருவது, இறந்த பிறகு சூட்சும உடலை வெளியே எடுத்துச் செல்வது) வாலைப்போல பிராணமய உடலுக்கு ஆதாரமாக இருக்கின்றது. இவ்வாறு உபநிஷத் சொல்வதை சிரத்தையோடு எடுத்துக் கொள்ள வேண்டும். இந்த பிராணமய கோஷத்தை பின்வரும் ரிக் மந்திரம் விளக்குகின்றது.*

***அனுவாகம் - 2.3***
*===============*

***ப்ராணம் தேவா அனுப்ராணந்தி | மனுஷ்யா: பசவச்ச யே | ப்ராணோ ஹி பூதானாமாயு: | தஸ்மாத் ஸர்வாயுஷமுச்யதே | ஸர்வமேவ த ஆயுர்யந்தி | யே ப்ராணம் ப்ரஹ்மோபாஸதே | ப்ராணோ ஹி பூதானாமாயு: | தஸ்மாத் ஸர்வாயுஷமுச்யத இதி | தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய ||***

சமஷ்டி பிராணனும், வியஷ்டி பிராணமயமும் ஒன்றுதான் என்று கூறுகின்றது. நம்மிடத்து இருக்கும் பிராணமயமும் உலகிலுள்ள அனைத்து ஜீவராசிகளில் இருக்கும் பிராணமயமும் ஒன்றுதான் என்று உணர்ந்து செயல்பட வேண்டும்.

பசி-தாகம் பிராணனின் செயல்பாடுகள். நமக்கு ஏற்படும் இவைகளே அனைத்து ஜீவராசிகளுக்கும் ஏற்படுகின்றது. இந்த ஐக்கியத்தை புரிந்து கொள்ள முடியாவிட்டால், இதை மனதில் தியானம் செய்ய வேண்டும்.

இந்த தியானத்தின் பலன் இந்த ஐக்கியத்தை உணர்ந்து கொள்ளுதல், அனுபவமாக இருக்க வேண்டும், நடைமுறையில் இது நம்முடைய சுபாவமாகவே மாறிவிடும். சகாம பலன் விதிக்கப்பட்ட முழு ஆயுளையும் அடைகின்றார்கள், துர்மரணம் ஏற்படாது. இவ்வாறு ரிக் மந்திரம் விளக்கத்தை முடிக்கின்றது.

இந்த பிராணமயத்தை சாரீர ஆத்மா என்றும் அழைக்கப்படுகின்றது. எவனொருவன் இதற்கு முன் உள்ள அன்னமய கோஷத்தினுடைய சாரீர ஆத்மாவாக இருக்கின்றானோ அவனே பிராணமயன்.

*அனுவாகம் – 3*
*=============*

*தஸ்மாத்வா ஏதஸ்மாத் ப்ராணமயாத் | அன்யோந்தர ஆத்மா மனோமய: | தேனைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ | தஸ்ய புருஷவிததாம் | அன்வயம் புருஷவித: | தஸ்ய யஜீரேவ சிர: | ரிக் தக்ஷிண: பச்ஷ: | ஸாமோத்தர: பச்ஷ: | ஆதேச ஆத்மா | அதர்வாங்கிரஸ: புச்சம் ப்ரதிஷ்ட்டா | ததப்யேஷ ச்லோகோ பவதி ||*

*முன் சொல்லப்பட்ட பிராணமயத்திலிருந்து வேறாகவும், உள்ளேயும் உள்ள ஆத்மா மனோமயன். இதன் மூலம் பிராணமயன் அனாத்மா என்று நீக்கப்படுகின்றது.*

*அதனால் மனோமய கோஷத்தினால் பிராணமயமானது வியாபிக்கப்படுகின்றது. இந்த மனோமயன் ஸ்தூல உடலை போன்றவன். அந்த பிராணமயனுடைய உடலமைப்பை ஒட்டியே இந்த மனோமயனுடைய உடலும் அமைகின்றது.*

*யஜீர்வேதமே தலைப்பாகம், ரிக்வேதம் வலதுபாகம், சாமவேதம் இடதுபாகம், வேதத்தின் கட்டளைகள் நடுப்பாகம், அதர்வண வேதம் உடலை தாங்கும் பாகமாக அமைகின்றது. ரிக்மந்திரம் இதை விளக்குகின்றது.*

*அனுவாகம் - 4*
==============

*யதோ வாசோ நிவர்த்தந்ததே | அப்ராப்ய மனஸா ஸஹ | ஆனந்தம் ப்ரஹ்மணோ வித்வான் | ந பிபேதி கதாசனேதி | தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய ||*

*வியஷ்டி மனோமயமும் சமஷ்டி மனோமயமும் ஒன்றுதான் என்று நாம் புரிந்து கொள்ள வேண்டும். ஏனென்றால் உபநிஷத் இதை மறைமுகமாகத்தான் கூறுகிறது.*

*வாக்கானது மனதுடன் சென்று ஹிரண்யகர்ப்பனை அடையமுடியாமல் திரும்பி வந்து விடுகின்றது. சூட்சும பிரபஞ்சத்தின் உருவமாக இருக்கின்ற ஹிரண்யகர்ப்பனை விளக்க முடியாமல் வியஷ்டி மனமானது திரும்பி வந்து விட்டது. இதிலிருந்து வியஷ்டியானது சமஷ்டியை விளக்க முடியாது என்று தெரிகின்றது.*

*தனிமரம் தோப்பாகாது என்பது போல இது என்று புரிந்து கொள்ள முடிகின்றது. இதிலிருந்து இரண்டும் ஒன்றுதான் என்ற அறிவு புகட்டப்படுகின்றது. எனவே உபாஸகன் ஹிரண்யகர்ப்பனை ஆனந்த ஸ்வரூபமாக தியானிப்பதனால், அவனுக்கு எப்பொழுதும், எதனிடத்திலும் பயமில்லை. அதாவது பயமற்ற நிலையை அடைந்திடுவான்.*

*நிஷ்காம பலனானது மனோமயம் ஆத்மாவல்ல என்று புரிந்து கொண்டு அடுத்த கோஷ விசாரத்திற்கு செல்வான்.*

*முன் சொன்ன பிராணமயத்திற்கு யார் ஆத்மாவாக உள்ளே இருக்கின்றானோ அவனே இந்த மனோமயன். இத்துடன் ரிக் மந்திரம் முடிவடைகின்றது.*

***அனுவாகம் - 4.2***

===============

***தஸ்மாத்வா ஏதஸ்மான் மனோமயாத் | அன்யோந்தர ஆத்மா விஜ்ஞானமய: | தேனைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ | தஸ்ய புருஷவிததாம் | அன்வயம் புருஷவித: | யோக ஆத்மா | மஹ: புச்சம் ப்ரதிஷ்ட்டா | ததப்யேஷ ச்லோகோ பவதி ||***

*முன் சொல்லப்பட்ட மனோமயத்திலிருந்து வேறாகவும் உள்ளேயும் உள்ள ஆத்மா விக்ஞானமயன். இதனால் மனோமயமானது முழுவதுமாக வியாபிக்கப்பட்டுள்ளது. எனவே இது மனித உடலைப் போன்றது.*

*அந்த மனோமயன் உடலமைப்பை ஒட்டியே இந்த விக்ஞானமயனின் உடலமைப்பும் அமைகின்றது.*

இதனுடைய தலைப்பாகம் சிரத்தை, இது புத்தியை குறிக்கின்றது ஆதலால் அறிவை அடைவதற்கு தலையாக இருக்கும் சிரத்தை அவசியமாகின்றது. சரியான அறிவு வலதுபாகம், சரியாக புரிந்ததை செயல்படுத்துதலான வாய்மையே இடது பாகம். மனஒருமுகப்பாடு நடுப்பாகம். ஹிரண்யகர்ப்பன் வாலைப் போல் ஆதாரமாக இருக்கின்ற பாகம். இதை விளக்குவதற்கு மேற்கண்ட ரிக் மந்திரம் கூறுகின்றது.

காரண சரீரம் – ஆனந்தமய கோஷம்
ஸ்தூல சரீரம் – அன்னமய கோஷம்
சூட்சும சரீரம் – பிராண, மனோ, விக்ஞானமய கோஷங்கள்.

சூட்சும சரீரத்தில் ஐந்துவகை பிராணன்கள், ஐந்துவகை ஞானேந்திரியங்கள், ஐந்துவகை கர்மேந்திரியங்கள், மனம், புத்தி போன்றவைகள் அங்கங்களாக இருக்கின்றன.

**பிராணமய கோஷம்** – 5 பிராணன்கள், 5 கர்மேந்திரியங்கள்

**மனோமய கோஷம்** – மனமும், 5 வகை ஞானேந்திரியங்கள்

**விக்ஞானமய கோஷம்** – புத்தியும் 5 வகை ஞானேந்திரியங்கள்

***விசாரம்:-***

---------

*நான் என்று நாம் குறிப்பிடும் சொல்லுக்கு இரண்டு அர்த்தங்கள் உள்ளது.*

1. *சாஸ்திரம் கொடுக்கும் அர்த்தம்,*
2. *நாம் புரிந்து கொண்டிருப்பது.*

*சாஸ்திரம் நான் என்ற சொல்லுக்கு ஆத்மா என்று பொருள் சொல்கிறது. இந்த ஆத்மாவானது ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற குணங்களை உடையது. இந்த நிலையில் எப்பொழுதும் மனநிறைவுடனும், முழுமையாகவும் இருக்கின்றாய் என்று சாஸ்திரம் உரைக்கிறது.*

*நாம் புரிந்து கொண்டிருக்கும் இந்த நான் கீழே விளக்கப்படுகின்றது.*

a. *அறிவு ஸ்வரூபத்துடனும் உணர்வுடனும் உள்ள இருக்கின்ற ஒன்றைத்தான் குறிப்பிடுகின்றோம்.*

b. *இந்த அறிவுடன் மூன்று சரீரங்களையும் சேர்த்து நாம் புரிந்து கொண்டிருக்கின்றோம். உதாரணமாக நான் நடக்கின்றேன் என்று சொல்லும் போது ஸ்தூல சரீரத்தையும், நான் மகிழ்ச்சியுடன் இருக்கின்றேன் என்று*

சொல்லும் போது சூட்சும சரீரத்தையும் குறிக்கின்றோம்.

*c.* இவ்வாறு ஸ்தூல சரீரத்தையொட்டி செய்யும் செயலின் போது ஸ்தூல சரீரத்தையும், மனதுடன் கூடிய இந்திரியங்களை பயன்படுத்தும்போது சூட்சும சரீரத்தையும் குறிக்கின்றோம்.

*d.* எப்பொழுதெல்லம் மூன்று சரீரத்தில் அபிமானம் வைக்கின்றோமோ அப்பொழுதெல்லாம் அவைகளின் குணங்கள் நான் என்பதின் குணங்களாகின்றன.

*e.* ஸ்தூல சரீரம் பல மாற்றங்களையுடையது, அழிவிற்குட்பட்டது ஆகவே அதனுடன் சம்பந்தம் வைக்கும் இந்த நான் அழிவிற்குட்பட்டதாகின்றது.

*f.* ஸூக்ஷ்ம சரீரம் பல குணங்களையுடைதாக இருப்பதால், இந்த நான் என்ற சொல்லிலும் பல குணங்கள் இருப்பதாக தோன்றுகிறது.

*3.* சாஸ்திரம் சொல்லும் நான் நிலையானது, குணங்களற்றது எனவே இதை அசம்சாரி என்று குறிப்பிடப்படுகின்றது.

4. நாம் குறிப்பிடும் நான் என்ற சொல்லில் அழிவுடையதாகவும், குணங்களுடையதாகவும் இருக்கின்றது. இதனால் நாம் பலவித சுக-துக்கங்களை அனுபவிக்கின்றோம். எனவே இதை சம்சாரி என்று குறிப்பிடப்படுகின்றது.

5. தேவையில்லாமல் நாம் சேர்த்து புரிந்து கொண்டிருக்கும் இந்த மூன்று சரீரங்களையும் நீக்கி சரியான அறிவை நமக்கு கொடுப்பதுதான் சாஸ்திரத்தின் நோக்கம். சாஸ்திரம் இந்த மூன்று சரீரங்களை ஐந்து கோசங்களாக பிரித்து பிறகு நீக்குகின்றது. ஒவ்வொரு கோசமாக எடுத்துக்கொண்டு அது ஆத்மா என்று முதலில் ஏற்றுக்கொண்டு பிறகு அதிலுள்ள தோஷங்களை எடுத்துக்காட்டி அதை நீக்கி விடும். இவ்வாறாக ஒவ்வொன்றாக நீக்கி இறுதியில் நான் என்ற சொல்லின் உண்மையான பொருளை நமக்கு புரிய வைக்கின்றது.

6. நாமும் சாஸ்திரத்தை பின்பற்றி ஒவ்வொரு கோஷத்தின் மீதுள்ள அபிமானத்தை நீக்கி வர வேண்டும். இது அவ்வளவு சுலபத்தில் நடக்காது, முழு முயற்சியுடன் இடைவிடாமல் விசாரம் செய்து இந்த நிலையை அடைய வேண்டும்.

7. முதலில் நமக்கு எந்த கோஷத்தின் அதிக அபிமானம் இருக்கின்றது என்பதை கண்டு பிடிக்க வேண்டும்., அதை தெரிந்து கொண்டால்தான் அடுத்த கோஷத்திற்கு செல்ல முடியும்.

8. சாதாரணமாக நாம் எல்லா கோஷத்திலும் அபிமானம் வைத்துக் கொண்டிருப்போம். ஆனால் அதிகமாக எந்த கோஷத்தின் அபிமானம் வைத்திருக்கின்றேன் என்பதை சிந்தித்து பார்த்து கண்டு பிடிக்க வேண்டும்.

இதற்கு இரண்டு வழிகள் உண்டு.

a. நம் மனம் எதைக்குறித்து அதிக கவனம் செலுத்திக் கொண்டிருக்கின்றது என்பதை சிந்தித்து பார்க்க வேண்டும்.

b. எனக்கு வருகின்ற சுக-துக்கங்கள் எங்கிருந்து வருகின்றது என்பதையும் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

உதாரணமாக, உடலைச் சார்ந்து வருகின்றதா, மனதைச் சார்ந்து வருகின்றதா, பிராணன் மூலமாக வருகின்றதா (நல்ல உணவு கிடைக்காததால் வரும் துன்பம்) அறிவு சம்பந்தமாக வருகின்றதா என்று

ஆராய்ந்து பார்க்க வேண்டும். இதை தெரிந்து கொண்ட பின்னர் அதிலிருந்து விடுபட முயற்சி மேற்கொள்ள வேண்டும்.




## அன்னமய கோஷம்

உடல் அலங்காரம், உடலுக்கு வரும் கஷ்ட-நஷ்டங்களால் வருத்தத்தை அடைபவன், உடலின் தோற்றத்தில் வயதாகும் போதும், நோயினால், விபத்தினால் ஏற்படும் மாற்றத்தினால் வருந்துபவன்.

## *பிராணமய கோஷம்*

*உணவில் யாருக்கு அதிக கவனம் இருக்கின்றதோ அவர்கள் இந்த கோஷத்தில் இருப்பவர்கள். விரதங்களை மேற்கொண்டு இந்த அபிமானத்தை நீக்க வேண்டும். ஏதாவது வேலை செய்து கொண்டு இருக்க வேண்டும் என்று நிலையை உடையவர்களும் இந்த கோஷத்தின் இருப்பவர்கள்தான்.*

## *மனோமய கோஷம்*

*மற்றவர்கள் என்னை நேசிக்க வேண்டும், அன்பாக நடத்த வேண்டும், தான் அன்பு செலுத்துவதற்கு யாராவது வேண்டும் என்று நினைப்பவர்கள் இந்த கோஷத்தில் இருப்பவர்கள்.*

## *விக்ஞானமய கோஷம்*

*மனம் மிக நுண்ணியதாக சிந்திக்கும். யாராவது சிறிது திட்டினாலோ, அறிவில் குறை கண்டாலோ வருத்தைமடைபவர்கள் இதில் இருப்பவர்கள்.*

## *ஆனந்தமய கோஷம்*

*நான் எல்லாவற்றையும் அனுபவிக்க வேண்டும் என்ற ஆர்வம். இவ்விதம் நம் மனம் விதவிதமான நிலையில் இருக்கின்றது.*

அதை தெரிந்து கொண்டு அதை நீக்குவதற்கு சாஸ்திரம் உபதேசிக்கும் வழிமுறைகளை கடைப்பிடித்து ஒவ்வொரு கோஷமாக நீக்கி அடுத்த நிலைக்கு சென்று விட வேண்டும்.

கடைசியில் ஆனந்தமய கோஷத்தையும் தாண்டி ஆத்ம ஞானத்தை அடைய வேண்டும்.

**அனுவாகம் - 5.1**
===============

**விஜ்ஞானம் யஜ்ஞம் தனுதே | கர்மாணி தனுதேபி ச | விஜ்ஞானம் தேவாஸ் ஸர்வே | ப்ரஹ்ம ஜ்யேஷ்ட்டமுபாஸதே | விஜ்ஞானம் ப்ரஹ்ம சேத்வேத | தஸ்மாச்சேன்ன ப்ரமாத்யதி | சரீரே பாப்மனோ ஹித்வா | ஸர்வான் காமான் ஸமச்னுத இதி | தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய ||**

விக்ஞானமய கோஷமானது (புத்தி - கர்த்ரு ஆத்மா) யாகங்களை, வைதீக கர்மங்களை சிரத்தையுடன் செய்கின்றவன், மற்ற லௌகீக கர்மங்களையும் செய்கின்றது. இந்த கருத்தின் மூலம் வியஷ்டி, சமஷ்டி விக்ஞானமயங்கள் ஒன்றுதான் என்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

எல்லா தேவர்களும் விக்ஞானமய கோஷத்தை முக்கியமாகவும், முதன்மையாகவும் உள்ள பிரஹ்மனாக (ஹிரண்யகர்ப்பனாக) உபாஸனை

செய்கின்றார்கள். நாமும் இவ்வாறு உபாஸனை செய்ய வேண்டும்.

நிஷ்காம பலன் இது நம்மை அடுத்த கோஷத்திற்கு எடுத்துச் செல்லும். இந்த உபாஸனம் கடினமானது, இதில் தோல்வியடைவதற்கு வாய்ப்புக்கள் அதிகம். நம்மையறியாமலே பலனை பெற முடியாமல் போய்விடும்.

விக்ஞானமய கோஷத்தை ஹிரண்யகர்ப்பனாக ஒருவன் தியானித்தால் அவன் தவறு எதுவும் செய்யாமல் இருந்தால் அதாவது நமது அபிமானம் வெவ்வேறு கோஷத்திற்கு சென்று விடாமல் இருந்தால் அவனுக்கு பின்வரும் பலன்களை அடைவான் என்று சொல்லப்படுகிறது.

சரீர சம்பந்தபட்ட பாவங்களை நீங்கப்பெற்று, எல்லா ஆசைகளையும் அடைகின்றான். இத்துடன் ரிக் மந்திரம் முடிவடைகின்றது.

நாம் எப்பொழுதெல்லாம் பாவம் செய்கின்றோமோ அப்பொழுதெல்லாம் அன்னமய கோஷத்திற்கு வந்து விடுகின்றோம். எனவே சரீர சம்பந்தத்தில் இருக்கும்போது பாவங்கள் செய்ய நேரிடுகின்றது. இதையே சரீர சம்பந்தபட்ட பாவங்கள் என்று இங்கே குறிபிடப்படுகின்றது.

புண்ணியத்தினால் இவ்வுலகின் இருக்கும் போது எல்லா இன்பங்களையும் அடைகின்றான். இறந்த

*பிறகு ஹிரண்யகர்ப்பனின் ஒரு அங்கமாக ஐக்கியமாகி விடுவான். மீண்டும் சம்சாரியாக பிறக்க மாட்டான். இந்த விக்ஞானமய கோஷத்திற்கு சரீர ஆத்மா என்றும் அழைக்கபடுகின்றது. இந்த கோஷம் மனோமயத்திற்குள் இருப்பதால் அதனுடைய உடலான ஆத்மாவாக கூறப்படுகின்றது.*

***அனுவாகம் - 5.2***

=================

***தஸ்மாத்வா ஏதஸ்மாத் விஜ்ஞாமயாத் | அன்யோந்தர ஆத்மானந்தமய: | தேனைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ | தஸ்ய புருஷவிததாம் | அன்வயம் புருஷவித: | தஸ்ய ப்ரியமேவ சிர: | மோதோ தஷிண: பஷ: | ப்ரமோத உத்தர: பஷ: | ஆனந்த ஆத்மா | ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்ட்டா | ததப்யேஷ ச்லோகோ பவதி ||***

*முன் சொல்லப்பட்ட விக்ஞானமயத்திலிருந்து வேறாகவும், உள்ளேயும் உள்ளது ஆத்மாவே ஆனந்தமயன். இதை போக்த்ரு ஆத்மா என்றும் அழைக்கலாம்.*

*ஆனந்தமய கோஷத்திற்கு வியஷ்டி, சமஷ்டி கிடையாது, உபாஸனையும் கிடையாது.*

*ஆனந்தமய கோஷம் காரண சரீரத்தை சார்ந்தது. காரண நிலையில் வேற்றுமைகள் கிடையாது. அதனால் ஐக்கியமும், உபாஸனையும் கிடையாது.*

இதுவரை முன்னேயுள்ள கோஷத்தை நீக்கித்தான் அடுத்த கோஷத்தை அறிமுகப்படுத்தப்பட்டது. ஆனால் இங்கு அதுபோல செய்யவில்லை. எனவே இந்த கோஷத்தை நீக்காமல் அதை வைத்துக்கொண்டே ஆத்மாவை அறிமுகப்படுத்துகின்றது.

ஆத்ம தத்துவத்தை உணர்ந்தவுடன் தானாகவே இந்த கோஷத்திலிருந்து வெளியே வந்து விடுவோம்.

ஆகாசத்தை விளக்குவதற்கு குடத்திலுள்ள (பானை) ஆகாசத்தை காட்டி இதுதான் எங்கும் நிறைந்திருக்கின்றது என்று புரிய வைக்கலாம்.

ஆகாசம் புரிந்தவுடன் இனி இந்தப் பானை தேவையில்லை. அதுபோல ஆத்மாவை விளக்குவதற்கு ஆனந்தமய கோஷம் உபயோகப்படுத்தப்படுகின்றது.

ஆத்மாவை உணர்ந்தவுடன் இந்த கோஷம் தானாகவே மறைந்து விடுகின்றது.

ஆத்மாவிற்கு குறிப்பிட்ட குணமும் எதுவும் இல்லாததால் அதை விளக்க முடியாது. ஆதலால் இந்த கோஷம் ஆத்மாவை விளக்குவதற்கு பயன்படுத்தப்படுகின்றது.

ஆனந்தமய என்பது ஆனந்த விகாரத்தை குறிக்கின்றது. இதை போக்த்ரு ஆத்மா என்றும் அழைக்கப்படுகின்றது. மனதில் எழும் உணர்ச்சிகளுடன் கூடிய எண்ணங்கள் மனோமயத்தைக் காட்டுகின்றது.

இந்த எண்ணங்களில் எது நான் செய்தேன் என்று உபயோகிக்கும்போது அது விக்ஞானமய கோஷத்தை குறிக்கின்றது. சில எண்ணங்களால் நான் சுகத்தை அனுபவிக்கின்றேன் என்று உணரும்போது அது ஆனந்த மய கோஷத்தில் இருப்பதை குறிக்கின்றது.

இதிலிருந்து எண்ணங்கள் மூன்று வகையாக பிரிக்கப்படுகின்றது. கரண ரூபமாக இருக்கும் எண்ணங்கள் மனோமயத்தில் இருப்பதையும், கர்த்துரு ரூபமாக இருக்கும் எண்ணங்கள் விக்ஞானமய கோஷத்தில் இருப்பதையும், போக்த்ரு ரூபமாக இருக்கும் எண்ணங்கள் ஆனந்தமய கோஷத்தில் இருப்பதையும் குறிக்கின்றது.

மனதிற்கு ஆத்மாவை பிரதிபலிக்கும் குணம் இருக்கிறது. அதனால்தான் ஜடமான மனது உணர்வுடன் செயல்படுவது போல தோன்றுகின்றது.

நிலைக்கண்ணாடியில், தூய நீரில் பிரதிபலிக்கும் சூரியனைபோல ஆத்மா மனதில் பிரதிபலிக்கின்றது. ஆத்மா ஆனந்த ஸ்வரூபமானது. இந்த ஆனந்த ஸ்வரூபம் மனதில் பிரதிபலிக்கும் போது நாம் இன்பத்தை அனுபவிக்கின்றோம், ஆனந்தமய

கோஷத்தில் இருக்கின்றோம் என்று உணர்ந்து கொள்ள முடிகின்றது.

நாம் பார்த்து அனுபவிக்கும் பொருளில் உண்மையிலேயே சுகம் கிடையாது. அதேப்பொருள் வேறொரு சூழ்நிலையில் துக்க ஸ்வரூபமாக மாறிவிடுகின்றது. உலகத்திலுள்ள எந்தப்பொருளிலும் சுகம் என்பது கிடையாது.

பிறகு சுகம் எங்கிருந்து வருகின்றது என்ற ஆராய்ந்து பார்த்தால், எண்ணங்கள் சூட்சும்மாகும் போது மனது ஆத்மாவினுடைய ஆனந்தஸ்வரூபத்தையும் பிரதிபிம்பிக்கின்றது. நாம் அடையும் சுகத்தில் ஏற்றத்தாழ்வையும் பார்க்கின்றோம். இதற்குக் காரணம் மனதில் எழும் சுகத்தைக் கொடுக்கும் எண்ணங்கள்தான்.

ஆத்மாவின் ஆனந்த ஸ்வரூபம் எண்ணங்களை பொறுத்து ஏற்றத்தாழ்வுடன் பிரதிபலிக்கின்றது.

உதாரணமாக தூசிபடிந்த கண்ணாடியில் பிரதிபலிக்கும் சூரிய ஒளியைவிட தூய்மையான கண்ணாடியில் பிரதிபலிக்கும் ஒளியின் பிரகாசம் அதிகமாக இருப்பதைப் போல மனத்தூய்மையை பொறுத்து பிரதிபலிக்கும் ஆத்மாவின் ஆனந்தஸ்வரூபம் இருக்கின்றது.

மனதின் சூட்சுமத்தன்மை மூன்று வகையாக பிரிக்கப்படுகின்றது.

*அவைகள் 1, ப்ரியவ்ருத்தி, 2. மோத வ்ருத்தி, 3. பிரமோத வ்ருத்தி ஆகும்.*

*ஒன்றைவிட ஒன்று மிக சூட்சுமமானது. எண்ணங்கள் சூட்சுமம் அதிகமாகும்போது ஆனந்த நிலையும் அதிகரிக்கும்.*

*1. ப்ரிய வ்ருத்தி - விருப்பமான பொருளைப் பார்ப்பதினால் தோன்றும் எண்ணம்*

*2. மோத வ்ருத்தி - விரும்பிய பொருளை அடையும்போது தோன்றும் எண்ணங்கள்*

*3. பிரமோத வ்ருத்தி — அடைந்த பொருளை அனுபவிக்கும்போது எழும் எண்ணங்கள்*

*இந்த மூன்று விதமான சூட்சுமமான எண்ணங்கள் (வ்ருத்திகள்) பிரதிபிம்ப ஆனந்தத்துடன் சேரும்போது அதுவே ஆனந்தமய கோஷம் என்று புரிந்து கொள்ள வேண்டும்.*

*உண்மையில் உலகத்தில் உள்ள பொருட்களிலிருந்துதான் இந்த எண்ணங்கள் எழுகின்றது. எனவே பொருட்களில் சுகமில்லை என்று புரிந்து கொள்ள முடியும்.*

*ஆழ்ந்த உறக்கத்தில் நாம் அனுபவிக்கும் சுகம் எந்தப்பொருட்களினால் வருவதில்லை. ஆழ்ந்த உறக்கத்தில் மிகவும் சூட்சுமமான எண்ணங்கள் தோன்றுகின்றது அதில் ஆத்மாவில் ஆனந்த*

ஸ்வரூபம் அதிமாக பிரதிபலிப்பதால் அதிகமான சுகத்தை அனுபவிக்க முடிகின்றது.

இதிலிருந்து ஆனந்தமய கோஷம் என்பது மனதில் இருக்கின்ற சூட்சுமமான எண்ணங்கள் அதில் பிரதிபலிக்கின்ற ஆத்மானந்தம்.

மனதில் எழும் இந்த எண்ணங்களுக்கு சுகம் கொடுக்கும் சக்தி கிடையாது, ஏனென்றால் அவைகள் வெறும் ஜடம்தான் என்று சாஸ்திரம் கூறுகின்றது.

இதில் பிரதிபலிக்கும் ஆத்மாவின் ஆனந்தம்தான் நாம் அனுபவிக்கின்றோம். ஆனால் ஆத்மாவில் இருக்கும் ஆனந்தத்தில் எந்தவிதமான ஏற்றத்தாழ்வுகள் கிடையாது, இது பூரணமானது, முழுமையானது.

ஆனந்தமய கோஷத்தினால் விக்ஞானமய கோஷம் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஆனந்தமயன் மனிதனைப்போல உடலை உடையவன். அந்த விக்ஞானமய உடலமைப்பை ஒட்டி இந்த ஆனந்தமயனின் உடல்வடிவம் அமைகின்றது.

இந்த சரீர கற்பனை உபாஸனைக்காக கூறவில்லை. ஆனந்தமயத்தின் தலைப்பாகம் பிரிய விருத்தியாகவும், வலதுபாகம் மோதமாகவும், இடதுபாகம் பிரமோத விருத்தியாகவும், ஆனந்தமே நடுப்பாகமாகவும், பிரஹ்மமே வாலைப்போல் அதை தாங்குவதாகவும் கூறப்படுகின்றது.




ஆனந்தமய கோஷத்தில் உள்ள ஆனந்தமானது மூன்றுவிதமான ஏற்றத்தாழ்வுகளை உடையது என்பதைக் காட்டுவதற்காக இவ்வாறு சொல்லப்படுகின்றது.

எங்கிருந்து ஜடமான இந்த எண்ணங்களில் ஆனந்தமானது வருகின்றது. இந்த ஏற்றத்தாழ்வான ஆனந்தத்திற்கு உபாதான காரணமாக இருப்பது ஆனந்த ஸ்வரூபமான ஆத்மாதான் என்றும், பூரணமானதும், முழுமையானதுமான, இருமையற்ற பிரம்மன் தான் இதற்கு ஆதாரமாக உள்ளது.

*அனுவாகம் - 6.1*
===============

***அஸன்னேவ ஸ பவதி | அஸத் ப்ரஹ்மேதி வேத சேத் | அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத | ஸந்தமேனம் ததோ விதுரிதி | தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய ||***

*ஒருவன் பிரம்மத்தை இல்லையென்று கருதினால் அவன் இல்லாதவன் போல் ஆகின்றான். இவன் சம்சாரத்தை அனுபவித்துக்கொண்டு பிரம்மத்தை அறியாமல் எப்பொழுதும் துயரத்தை அனுபவித்துக் கொண்டிருப்பான்.*

*பிரம்மம் இருக்கின்றதென்று ஒருவன் கருதினால் அவனை ஸத்புருஷனாகவும், மேலோனாகவும், புருஷார்தத்தை அடைந்தவனாகவும் ரிஷிகள் கருதுகின்றார்கள். இவ்வாறு ரிக் மந்திரம் சொல்லுகிறது.*

*முன் சொன்ன விக்ஞானமயத்திற்கு எந்தவொன்று உள்ளே உள்ள ஆத்மாவாக இருக்கின்றானோ அவனே இந்த ஆனந்தமயன்.*

## அனுவாகம் - 6.2

===============

**அதாதோனு ப்ரச்னா: | உதா வித்வானமும் லோகம் ப்ரேத்ய | கச்சன கச்சதீ | ஆஹோ வித்வானமும் லோகம் ப்ரேத்ய கச்சித் ஸமச்னுதா உ ||**

இவ்விதம் உபதேசம் செய்ததற்கு பிறகும் சந்தேகம் இருப்பதனால் அதை ஒட்டிய கேள்விகள் எழுகின்றன.

**அவைகள்**

1. பிரம்மன் இருக்கின்றதா அல்லது இல்லையா?
2. ஞானி பிரம்மத்தை அடைகின்றானா, இல்லையா?
3. அக்ஞானி பிரம்மத்தை அடைகின்றானா இல்லையா?

ஞானியும், அக்ஞானியும் இருக்கும்போதும், இறந்தப்பிறகும் பிரம்ம ஸ்வரூபமாகவே இருக்கின்றார்கள்.

எனவே இந்த இரண்டு கேள்விகளும் தவறு.

இவர்கள் அடைவதற்கு தேவையே இல்லை. ஆத்ம ஞானத்தை அடைந்தவன் ஆத்மாகவே இருந்து கொண்டு ஆனந்தமாக இருக்கின்றான். ஆத்ம

ஞானத்தை அடையாதவன் அறியாமையில் இருந்து கொண்டு கர்ம பலன்களான சுக-துக்கங்களை அனுபவித்துக் கொண்டிருக்கின்றான்.



ஞானியானவன் பஞ்ச கோஷத்தை கடந்து பிரம்மத்தை அறிகின்றான்.

அக்ஞானி பஞ்ச கோஷத்திலேயே அபிமானம் கொண்டு அறியாமையில் இருந்து கொண்டு பிரம்மத்தை அறிவதில்லை.

*இனி அனுவாகம் 6.3 லிருந்து அனுவாகம் 7 வரையுள்ள பகுதிகளில் சங்கரர் ஏழு காரணங்களால் இதற்கு விளக்கம் அளித்துள்ளார்.*

*அனுவாகம் 6.3 லிருந்து அனுவாகம் 7 வரையுள்ள பகுதிகளில் சங்கரரின் விளக்கம்*

*அனுவாகம் – 6.3 லிருந்து 7வரை*
==============================

*இந்த பிரபஞ்சம் தோன்றுவதற்கு பிரம்மன் நிமித்த காரணமாக இருப்பதால் அது இருக்கின்றது என்று உணர்த்தப்படுகின்றது.*

*காரணம் – 1 (ஜகத் காரணத்வாத்)*
==============================

*ஸோகாமயத | பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி | ஸ தபோதப்யத | ஸ தபஸ்தப்த்வா | இதக்ம் ஸர்வமஸ்ருஜத | யதிதம் கிஞ்ச | தத்ஸ்ருட்வா | ததேவானுப்ராவிசத் | ததனுப்ரவிச்ய | ஸச்ச த்யச்சாபவத் | நிருக்தம் சாநிருக்தம் ச | நிலயனம் சாநிலயனம் ச | விஜ்ஞானம் சாவிஜ்ஞானம் ச | ஸத்யம் சான்ருதம் ச ஸத்யமபவத் | யதிதம் கிஞ்ச | தத் ஸத்யமித்யாசக்ஷதே | ததப்யேஷ ச்லோகோ பவதி ||*

பரம்பொருள் ஈஸ்வரன் (மாயையுடன் கூடிய பிரம்மன்) ஆசைப்பட்டார். நான் பலவாக பிறப்பேனாக என்று தவம் செய்தார். அவர் தவத்தை செய்து எவைகள் உண்டோ அவைகள் அனைத்தையும் தோற்றுவித்தார்.

அகாமயத - ஆசைப்படுவதிலிருந்து சேதன தத்துவம்தான் நிமித்தக்காரணம் என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். இங்கு ஆசை என்பது அவரிடமிருந்து ஒரு எண்ணம் தோன்றியது என்பதுதான்.

பஹூஸ்யாம் - என்னையே பலவாக பிறப்பித்துக்கொள்வேனாக என்று சங்கல்பம் செய்து கொண்டார்.

சஹ தம அதப்யஹ - அதற்கு அவர் தவம் செய்தார். இது எப்படி படைக்கலாம் என்று சிந்தித்தார். இது அவருடைய ஞானமய தவம், ஈஸ்வரன் மனது மாயா, ஸ்ருஷ்டிக்கு தயாராக இருக்கும் நிலை. ஈஸ்வரனின் சங்கல்பமே செயலாகி விடும்.

## காரணம் - 2 (ஜீவரூபேனே பா4ஸமானவாத்)

======================================

ஜீவ வடிவத்தில் வெளிப்படுவதால் பிரம்மன் உபாதான காரணம், ஈஸ்வரன் நிமித்த காரணம். ஜடமான மாயை இந்த பிரபஞ்சத்திற்கு காரணமாக சொல்லலாம். இது ஈஸ்வரனிடமிருந்து பிரிக்க

முடியாதது, மூன்று குணங்களை உடையது. இதிலிருந்து தோன்றியது பஞ்ச பூதங்கள் கொண்ட பிரபஞ்சம்.

மாயை ஜடமாக இருப்பதால், இதிலிருந்து தோன்றியவைகள் அனைத்தும் ஜடமாகத்தான் இருக்க வேண்டும். உதாரணமாக மனித உடல், கல், மலை போன்ற அனைத்தும் ஜடமானவை. ஆனால் மனித உடல் அறிவு பூர்வமாக இயங்குவதற்கு காரணம் அதில் பிரதிபலிக்கும் சேதனமான பிரம்மத்தின் இருப்பை புரிந்து கொள்ளலாம்.

தத் ஸ்ருஷ்ட்வா – இந்த பிரபஞ்சத்தை படைத்து, தத்3 ஏவ அனுப்ரவிசஸ்ய – அதற்குள் நுழைந்தார்.

இதை ப்ரவேச ஸ்ருதி என்று அழைக்கப்படுகின்றது. இதைப்பற்றி சுருக்கமான விளக்கம் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றது.

ஈஸ்வரன் எந்த ரூபத்தில் ஜீவனுக்குள் நுழைந்தார்?

இந்த பிரபஞ்சமாகவே ஈஸ்வரன் மாறியிருக்கும்போது எப்படி இதற்குள் நுழைய முடியும்! எனவே தன்னுடைய ஸ்வரூபமாக உள்ளே சென்றிருக்க முடியாது. பிறகு வேறு விதத்தில் சென்றிருக்கலாம் என்று கேள்வி எழும்போது அதைப் பற்றி இவ்வாறு விசாரம் செய்யப்படுகின்றது.

*பிரம்மனுக்கு இரண்டு உருவம் அவைகள் ஈஸ்வரன், ஜீவன். ஈஸ்வரன் பிரபஞ்சமாக இருக்கின்றார், ஜீவன் அதற்குள் நுழைந்தது என்று எடுத்துக் கொண்டால், பிரம்மன் இரண்டற்றது எனவே இது சாத்தியமில்லை.*

*இரண்டு அவயங்கள் உடையது என்றும் எடுத்துக் கொள்ள முடியாது. ஏனெனில் இது நிரவ்யமாக இருப்பதனாலும், எல்லாவிடத்திலும் வியாபித்து இருப்பதாலும் இதுவும் சாத்தியமில்லை.*

*ஈஸ்வரன் ஜீவ ரூபமாக பரிணாமம் அடைந்தார் என்றும் எடுத்துக் கொள்ள முடியாது.*

*இவ்வாறு விசாரித்து விட்டு பிரம்மன் புத்தியில் வெளிப்படுகின்றார், புத்தியில் அறியப்படுகின்றது என்று புரிந்து கொள்ள வேண்டும்.*

*உதாரணமாக,*

*தாய் சமையலறையை நோக்கி போய் கொண்டிருப்பதை பார்த்த மகனிடம், உன் தாய் எங்கே இருக்கின்றால் என்று கேட்டால், சமையலறைக்கு போனதை பார்த்தேன் என்று கூறுவான், இதிலிருந்து அங்கு இருக்கின்றால் என்று புரிந்து கொள்ளலாம் அல்லவா.*

*காரணம்-3 (ஜகத்ரூபேனே பா4ஸமானவாத்)*
*=====================================*

*ஜகத் வடிவத்தில் தோன்றி கொண்டிருப்பதால் பிரம்மன் இருக்கின்றதை அறிந்து கொள்ள முடியும். இந்த பிரபஞ்சத்தில் உள்ள அனைத்துமாக ஈஸ்வரன் இருந்து கொண்டிருக்கின்றார். இது போ4க்ய பிரபஞ்சம், அதாவது அனுபவிக்கப்படும் பிரபஞ்சமாக கருதப்படுகின்றது.*

*பிரம்மன் புத்தியில் வெளிப்படுபவராக இருந்து கொண்டு, உருவமுடைய, நம்மால் பார்க்கக் கூடிய மூன்று பூதங்களாகவும் (நீர், நிலம், நெருப்பு) தோன்றி கொண்டிருக்கின்றது. உருவமற்ற மற்ற இரு பூதங்களாகவும் (வாயு, ஆகாசம்) தோன்றி கொண்டிருகின்றது.*

*தெளிவாக விளக்க கூடியத்தாகவும், விளக்க முடியாததாகவும், தாங்குவதாகவும், தாங்கப்படுவதாகவும், அறிவுடையதாகவும் (சேதனம்), அறிவற்றதாகவும் (ஜடம்), உண்மையாகவும் (வியாவஹார சத்யம் – எல்லோராலும் அனுபவிப்பது) பொய்யானதாகவும், (பிராதிபாஸிக சத்யம் – கனவு – ஒருவனுக்கு மட்டும் உண்மையாக இருப்பது, கயிற்றில் தோன்றும் பாம்பு), இவ்வாறெல்லாம் பிரம்மன் மாறியிருக்கின்றது.*

எவைகளெல்லாம் இருக்கின்றதோ அவைகளெல்லாம் மாறியது. ஆகவே பிரம்மனை சத்யம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

**அனுவாகம் - 7**

==============

**காரணம்-4**

=========

சாஸ்திரத்தில் பிரமத்திற்கு பிரசித்தமான ஸூக்ருதம் (சுயம்பு ) என்ற வேறொரு பெயரும் உண்டு.

அஸத்3வா இத3ம் அக்3ர ஆஸீத் - நாம் பார்த்து கொண்டிருக்கும் இந்த பிரபஞ்சம் தோன்றுவதற்கு முன் அஸத்தாக இருந்தது, அதாவது வெளித்தோற்றத்திற்கு வராத நிலையில் இருந்தது.

வெளித்தோற்றத்திற்கு வந்த நாமரூபங்கள் எதையாவது ஒன்றை சார்ந்துதான் இருக்கும். வெளித்தோற்றத்திற்கு வராத நாம ரூபங்கள் (அஸத்) பிரம்மத்தை சார்ந்து இருக்கும். நாமரூபத்தை வெளிப்படுத்தாத பிரம்மன் என்பது இறுதியான பொருள்.

அப்படிபட்ட பிரம்மனிடமிருந்து வெளித்தோற்றத்திற்கு வந்த விதவிதமான நாமரூபங்கள் கூடிய ஜகத்தானது தோன்றியது. அது

*தன்னைத் தானே தோற்றுவித்துக் கொண்டது. அதே பிரம்மன் தானே தோற்றுவிப்பவர் என்று சொல்லப்படுகின்றது.*

*இவ்விதம் ரிக் மந்திரத்தின் விளக்கம் முடிவடைகின்றது. இதிலிருந்து பிரம்மனே இந்த உலகமாக காட்சியளித்துக் கொண்டிருப்பதால், பிரம்மன் இருக்கின்றது என்று நிரூபணமாகின்றது.*

***காரணம்-5***
=========

*பிரமத்திற்கு ரஸஹ (ஆனந்தம்) என்ற வேறொரு பெயராலும் வேதம் குறிக்கின்றது.*

*மனிதன் இந்திரியத்தின் துணைக்கொண்டு விஷயங்களிலிருந்து அதனோடு சம்பந்தம் வைப்பதால் ஆனந்தத்தை அடைகின்றான். ஆனால் ஆழ்ந்த உறக்கத்திலும் சுகம் இருக்கின்றது. இந்த இரண்டு நிலைகளிலும் சுகத்தை அனுபவிக்கின்றான் ஞானி. இவ்வாறாக சுகம் மூன்று விதமாக இருப்பதாக எடுத்துக்காட்டப்பட்டது.*

*வெளி விஷயங்கள்தான் சுகத்தைக் கொடுக்கும் என்ற கருத்து பொய்யாகிவிடும் ஆழ்நிலை உறக்கத்தில் சுகத்தோடு ஒப்பிடும்போது, ஏனெனில் அங்கு விஷயங்கள் எதுவும் இல்லை ஆனால் சுகத்தை அனுபவிக்கின்றோம்.*

*ஞானி எந்த விஷயங்களோடும் சம்பந்தம் இல்லாமல் திருப்தியுடன் இருக்கின்றான். இந்த நிலைக்கு காரணம் அவன் அடைந்த ஆத்ம ஞானத்தினால்தான். இதிலிருந்து அறிந்து கொள்வது பிரம்மன் தான் திருப்திக்கு காரணமாக இருக்கின்றது எனவே பிரம்மன் இருக்கின்றது என்று நிலை நாட்டப்பட்டது.*

***யத்4வை த்த் ஸுக்ருதம் | ரஸோ வை ஸஹ |***

*எந்த ஒன்று ஸ்க்ருதம் என்று அழிக்கப்படுகின்றதோ அதுவே ஆனந்த ரஸம் என்றும் அழைக்கப்படுகின்றது.*

***ரஸம் ஹி ஏவ அயம்*** *- எந்த ஒருவன் இந்த பிரம்மத்தை (ரஸத்தை)*

***லப்த்வானந்தீ ப4வதி*** *- அடைந்துதான் திருப்தியுடன் இருக்கின்றான்.*

*இதிலிருந்து நாம் அறிந்து கொள்வது பிரம்மன் என்ற ஒன்று இருக்கின்றது.*

***காரணம்-6***
*==========*

*நமது மனம், உடல், இந்திரியங்கள் செயல்படுவதிலிருந்து பிரம்மத்தின் இருப்பை நிலை*

*நாட்டலாம். பல பொருட்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட ரதமானது அதன் எஜமானனுக்குத்தானே தவிர அந்தப் பொருட்களுக்காக அல்ல. அதுபோல பல உறுப்புக்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட இந்த உடல் வேறு ஒன்று பயன் படுத்தத்தான் என்று புரிந்து கொண்டால் அந்த வேறு ஒன்று என்பது அறிவுடைய பிரம்மம்தான் என்று அறிந்து கொள்ள முடியும். பிரம்மத்தின் இருப்பு மீண்டும் நிலை நாட்டப்பட்டது.*

*யாரால் மூச்சுக்காற்றை உடலுக்குள்ளே இழுக்க முடியும், யாரால் மூச்சுக்காற்றை வெளியே விட முடியும். இந்த ஆனந்த ரூபமான பிரம்மன் மட்டும் ஆகாசத்தில் இல்லை என்றால், இங்கே ஆகாசம் என்பது ஹ்ருதய ஆகாசத்தை குறிக்கின்றது. இந்த பிரம்மம்தான் ஒருவனை மகிழ்விக்கின்றது, திருப்திப்படுத்துகின்றது.*

***காரணம்-7***

=========

*ப4ய-அப4ய* **ஹேதுத்வாத்** *- பயத்திற்கும் - அபயத்திற்கும் காரணமாக இருப்பது பிரம்மன்தான்.*

*கயிற்றில் தோன்றும் பாம்பை பார்த்து பயப்படுகின்றோம். அதற்குக் காரணம் கயிறுதான், இதுதான் பாம்பு தோன்றுவதற்கு காரணமாக இருக்கின்றது. கயிற்றை அதுவாக பார்க்கும்போது*

பயம் ஏற்படுவதில்லை, அதற்கும் கயிறுதான் காரணமாக இருக்கின்றது. அதேபோல ப்ரம்மனை புரிந்து கொண்டால் பயம் ஏற்படுவதில்லை, ஞானி அபயத்தை அடைவதற்கு காரணம், அவர் ப்ரம்மத்தை அறிந்து கொண்டதால் தான். பிரம்மத்தை புரிந்து கொள்ளாதவனுக்கு எப்பொழுதும் ஏதாவது ஒரு விஷயத்தில் பயந்து கொண்டிருப்போம்.

அத்யாஸம், அக்ஞானம் இரண்டும் சேர்ந்து நமக்கு பயத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும். நாமே நம்முடைய பயத்திற்கும், அபயத்திற்கும் காரணமாக இருக்கின்றோம்.

நம்முடைய பயத்திற்கு காரணமாக ஏதோ ஒன்று இருக்கும். அது பிரம்மனாக இருக்கும். ஏனென்றால் இந்த ஜகத்தில் உள்ள அனைத்தும் பிரம்ம ஸ்வரூபமாக இருக்கின்றது. அதுபோல அபயத்திற்கும் காரணமாக இருப்பதும் பிரம்மன்தான். ஏனென்றால் பிரம்மனாக நம்மை உணர்ந்து விட்டால் எதற்கும் நாம் பயப்படமாட்டோம்.

ஒருவன் எந்தக்காலத்தில் பிரம்மனிடத்தில் நிலைப் பெறுகின்றானோ, அந்தக்காலத்தில் பிரம்மத்தில் பயமற்ற ஆத்ம பாவத்தை அடைகின்றான் அல்லது உறுதியான ஆத்ம பாவத்தை, பிரம்ம நிஷ்டையை அடைகின்றான்.

பார்க்கப்படாத தன்மையுடையதும், மாற்றமடையாததும், ப்ரத்தியக்ஷ பிரமானத்திற்கு

*விஷயமாக இல்லாததும், சரீரமற்றதும், அனுமான பிரமானத்தினால் அறிய முடியாததும், ஆதாரமற்றதும், எதையும் சார்ந்தில்லாமல் இருப்பதாகவும் உள்ள பிரம்மத்தை உறுதியாக அறிந்தவன் பயத்திலிருந்து நீங்கியவனாகின்றான்.*

*எப்பொழுது இந்த அக்ஞானி பிரம்மனிடத்தில் சிறிதளவாவது வேற்றுமையை பார்க்கின்றானோ அவனுக்கு பயம் வந்தடைகின்றது. பிரம்மனே சாஸ்திரங்களை கற்றறிந்தும், ஆத்ம ஞானத்தை அடையாவிட்டால் அவனுக்கும் பயத்தை கொடுக்கின்றது.*

**அனுவாகம் – 8.1**
===============

*பிரம்மனிடத்தில் கொண்ட பயத்தினால் காற்று வீசுகின்றது. சூரியனும் உதிக்கின்றது. அக்னியும், இந்திரனும் தத்தம் வேலையை செய்து கொண்டிருக்கின்றனர். யமதர்மனும் தன் வேலையை செய்வதற்கு ஓடுகின்றார். இவ்வாறு கூறி ரிக் மந்திரம் முடிக்கின்றது.*

*கீழ்கண்ட பகுதியில் ஆனந்தத்தைப் பற்றிய விசாரம் செய்யப்படுகின்றது.*

**சுருக்கம்:-**
---------

1. இந்த விசாரம் எதற்காக செய்யப்படுகின்றது?
2. இதன் மூலம் எதை சொல்ல விரும்புகின்றது!
3. இதனால் அடையும் பலன்கள். மூன்று பலன்கள் சொல்லப்படுகின்றது.

a. ஆனந்தம் - பிரஹ்ம ஸ்வரூபம், ஆத்ம ஸ்வரூபம் என்ற அறிவை அடைவோம்.

b. வைராக்கியத்தின் முக்கியதுவத்தை, மேன்மையை எடுத்துரைக்கின்றது.

c. ஜீவ - ஈஸ்வர ஐக்கியத்தை விளக்குவதற்கு பயன்படுகின்றது.

**ஆனந்தம் பிரஹ்ம ஸ்வரூபம்:**
-----------------------------

அக்னி உஷ்ண ஸ்வரூபம் என்ற வாக்கியத்தின் பொருள் அது உஷ்ணமாக இருப்பதற்கு எதையும் சார்ந்திருக்க வேண்டியதில்லை. அதுபோல ஆத்மா ஆனந்தமாக இருப்பதற்கு எதையும் சார்ந்திருக்க தேவையில்ல. நானே ஆத்மாவாக இருப்பதால், நான் யாரையும் சார்ந்திருக்க தேவையில்லை.

நாம் எதற்காக இந்த விசாரம் செய்ய வேண்டுமென்றால், நம் அனுபவத்தில் ஆனந்தம் வெளியே உள்ள பொருட்களிலிருந்து வருவதாக உணர்ந்திருக்கின்றோம்.

அதனால் அந்தப் பொருட்களைச் சார்ந்திருக்கின்றேன். நான் சுபாவமாக ஆனந்தமாக இருக்கின்றேன் என்று உணரவில்லை. இதை உணர்த்துவதற்குத்தான் இந்த விசாரம் தேவைப்படுகின்றது.

*ஸுபாவத்தை நிரூபித்தல்:*

---

நான் ஆனந்தத்தை ஏற்றத்தாழ்வுகளுடன் அனுபவிக்கின்றோம்.

இந்த ஏற்றத்தாழ்விற்கு காரணம் எது என்று வினவும்போது விஷயங்கள்தான் இதை உருவாக்குகின்றது என்று புரிந்து கொள்ளலாம்.

சுகத்தின் ஏற்றத்தாழ்வு விஷயத்தின் நிமித்த காரணமா அல்லது உபாதான காரணமா, பொருளின் காரணமா அல்லது பொருளின் நிமித்தமாக உண்டாகின்றதா என்று வினவினால், பொருளே காரணம் என்று எடுத்துக் கொண்டால் அந்தப் பொருள் எல்லோருக்கும் ஒரே அளவுள்ள சுகத்தை கொடுக்க வேண்டும். ஆனால் அனுபவத்தில் அப்படி இல்லை. எனவே பொருளின் நிமித்தமே

வேறுபாட்டிற்கு காரணம் என்று அறிந்து கொள்ளலாம்.

நம்முடைய மனம்தான் உபாதியாக இந்த தாரதம்மியமான சுகத்திற்கு காரணமாக இருக்கின்றது. நம் மனதில் அமைதி அதிகரிக்கும்போது சுகமானது அதிகரிக்கிறது. மனம் சூட்சுமத்தன்மை அதிகரிக்கும்போது இன்பமும் அதிகரிக்கின்றது.

எப்பொழுது மனம் அமைதியடையும், சூட்சுமமாகும்?

இதற்கென்ன வழி என்று கேள்விகளுக்கு உபநிஷத் இரண்டு உபாயங்கள் கூறுகின்றது.

அவைகள் **அறிவு, வைராக்யம்.**

மனதில் அறிவு வளர வளர மனம் சூட்சுமாகின்றது, அமைதியும் அடைகின்றது. அதற்கேற்றவாறு சுகத்தின் அளவும் அதிகரிக்கின்றது.

மனம் சூட்சும்மாகும்போது மிக மிக நுண்ணிய விஷயங்களை கிரகிக்கின்றது. இது அடையும் அறிவினால் நிகழ்கின்றது. மனம் அமைதியாக இருக்கும்போது, சூட்சுமமாக இருக்கும்.

வைராக்கியம் அதிகருக்கும்போது மனம் அமைதியடைகின்றது.

இந்த ஆனந்தம் எங்கிருந்து வருகின்றது என்று கேட்கும்போது நம் மனதிலிருந்து தான் வருகின்றது என்று சொன்னால் தவறு.

மனம் சுகத்தின் உற்பத்தி ஸ்தானம் கிடையாது.

மனம் ஒடுங்கி செயல்படாமல் இருக்கும்போது ஆனந்தம் வரக்கூடாது, ஆனால் ஆழ்ந்த உறக்கத்தில் மனம் ஒடுங்கிய நிலையில் ஆனந்தத்தை அனுபவிக்கின்றோம். எனவே மனம் ஆனந்தத்தின் உற்பத்தி ஸ்தானமல்ல என்று நிரூபணமாகின்றது.

இவ்வாறு எல்லாவற்றையும் நீக்கிக் கொண்டு வந்தால், அதை பார்த்துக் கொண்டு இருப்பவன்தான் இருக்கின்றான். அதுதான் ஆத்மா.

என்றும், மனமானது ஆனந்தத்தை பிரதிபிம்பிக்கின்ற தன்மையுடன் இருக்கின்றது என்று புரிந்து கொள்ள முடிகின்றது.

உதாரணமாக நிலைக்கண்ணாடிக்கு அதன் எதிரே வரும் பொருளை பிரதிபிம்பிக்கும் தன்மையுடையது.

தூசிபடிந்த கண்ணாடியில் பிம்பம் தெளிவாக இருக்காது. சுத்தப்படுத்திப் பார்க்கும்போது அதுவே தெளிவாக தெரியும்.

இதிலிருந்து நாம் அறிய வேண்டியது மனதின் சூட்சும தன்மை அதிகரிக்கும் போது அதில் பிரதிபலிக்கும் ஆனந்தமும் அதிகரிக்கும்.

ஆத்மா ஆனந்த ஸ்வரூபமாக இருப்பதால்,மனமானது அதை பிரதிபிம்பிக்கும்போது ஆனந்தம் ஏற்படுகின்றது. இதிலிருந்து நம்மால் ஆத்மா ஆனந்த ஸ்வரூபம் என்று தெளிவாக புரிந்து கொள்ள முடியும்.

வைராக்கியத்தின் பெருமை:-
-----------------------------

மனதில் அனுபவிக்கும் ஆனந்தத்தின் ஏற்றத்தாழ்வு வைராக்கியத்தின் அளவை பொறுத்திருக்கின்றது.

ஆசைகள் குறைய குறைய ஆனந்தம் அதிகரிக்கின்றது.

காமத்தியாகம் இரண்டு விதத்தில் ஏற்படுகின்றது. எப்படி ஆசைகளை மனதிலிருந்து நீக்க வேண்டும் என்று கேட்டால், விரும்பிய பொருளை அடையும் போது அதிலுள்ள குறையை ஆராய்ந்து அறிந்து அந்த ஆசையை நீக்கி விடுதல்.

அடையும் பொருள் கொடுக்கும் சுகத்தைவிட அதை விலக்குவதால் அடையும் இன்பம் நூறுமடங்காக இருக்கும்.

*வைராக்கியத்தினல் இரண்டுவிதமான பலன்களை அடையலாம்.*

*அவைகள்*

1. *லௌகீக வாழ்க்கையிலே அதிக இன்பத்தை அனுபவிக்கலாம், பிரதிபிம்பானந்தத்தை அனுபவிக்கலாம். வைராக்கியத்தின் அளவு அதிகரிக்கும்போது இன்பமும் அதிகரிக்கின்றது. இதனால் மனம் அதிகமாக அமைதியடையும், சூட்சுமமடைகின்றது.*

2. *வைராக்கியத்தின் அளவு அதிகரிக்கும்போது மோட்சத்தை அடைவதற்கு தகுதியை கொடுக்கின்றது.*



*பிரம்மானந்தம் :*
*-----------------*

*நானே சுபாவமாக பிரம்மனாகவே இருக்கின்றேன் என்ற நிலையை அடையும்போது அனுபவிக்கின்ற இன்பம். இந்த இன்பத்தை அனுபவிக்க எதையும் சார்ந்திருக்கத் தேவையில்லை.*

*ஏனென்றால் ஆத்மாவில் ஸ்வரூபமே ஆனந்தமாக இருக்கின்றது.*

*தன்னிடத்திலே திருப்தியுடன் இருப்பவன் தான் நிலையாக இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருப்பான் என்று பகவான் கீதையில் கூறியிருக்கின்றார்.*

*இந்த பிரம்மானந்தத்தை அடைவதற்கு வைராக்கியம் மிக முக்கியமானதாக கருதப்படுகின்றது.*

*(பகுதி-3)*
*************

**அனுவாகம்** — *8.2*
=================

*மனித லோகத்தில் அடையக்கூடிய அதிக சுகங்களை கற்பனை செய்யப்படுகிறது. இதையெல்லாம் அடைந்தால் அனுபவிக்கும் ஆனந்தத்தை விட நூறு மடங்கு ஆனந்தத்தை இந்த சுகங்களை நீக்குவதால் அடையலாம்.*

*இளம் வயதுடைய ஒருவன் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட கர்மங்களை செய்வபவன், நன்னெறியை பின்பற்றுகின்றவன், நன்கு சாஸ்திரங்களை கற்றவன், விரைவில் செயல்படும் திறமையுடையவன், மூவரிடம் நன்கு முறையாக உபதேசத்தை பெற்றவன் அவர்களுடைய அனுக்கிரகத்தைப் பெற்றவன், உறுதியான உள்ளமுடையவன், மனோ தைரியமுடையவன், நிச்சயமாக முடிவெடுப்பவன், உடல் வலிமையுடையவன், ஆரோக்கியமாக இருப்பவன் அவனுக்கு செழிப்பான இந்த முழு பூமியை அடைந்தவனாக இருக்கின்றான். இதுதான் ஒரு மனிதனுக்கு கிடைக்கக்கூடிய அதிகபட்ச ஆனந்தம். இது ஒரு பங்கு ஆனந்தம் என்று வைத்து கொள்வோம்.*

*மனிதனுடைய நூறுபங்கு ஆனந்தம் எவையோ அவை மனித கந்தர்வர்களுடைய ஒரு பங்கு ஆனந்தம். ஸ்ரோத்ரியஸ்ய, அகாமஹதஸ்ய – மனிதர்களாக பிறந்து சாஸ்திரங்களை கற்றறிந்து மனித லோகத்தில் வைராக்கியம் உடையவனுக்கும் இதே நூறு மடங்கு இன்பத்தை அனுபவிக்கின்றான்.*

*மனித கந்தர்வனுடைய நூறு மடங்கு ஆனந்தம் தேவகந்தர்வனுடைய ஒரு மடங்கு ஆனந்தம். மனித கந்தர்வ லோகத்தில் வைராக்கியமுடைய மனிதனுக்கு அதே அளவு ஆனந்தத்தை அனுபவிக்கின்றான்.*

*தேவ கந்தர்வனுடைய நூறு மடங்கு ஆனந்தம் = பித்ரு லோகத்தில் இருக்கின்றவர்களின் ஒரு பங்கு ஆனந்தம். தேவகந்தர்வ லோகத்தில் வைராக்கியமுடைய மனிதனுக்கும் இதே அளவு ஆனந்தம்.*

*பித்ருக்களுடைய 100 மடங்கு ஆனந்தம் = ஸ்மார்த்த தேவலோகத்தில் உள்ளவர்களின் ஒரு பங்கு ஆனந்தம். பித்ரு லோகத்தில் வைராக்கியம் உள்ள மனிதனுக்கும் இதே அளவு ஆனந்தம்.*

*ஸ்மார்த்த தேவலோகத்தில் உள்ள 100 மடங்கு ஆனந்தம் = கர்ம தேவலோகத்தில் உள்ளவர்களின் ஒரு பங்கு ஆனந்தம். ஸ்மார்த்த தேவ லோகத்தில் வைராக்கியம் உள்ள மனிதனுக்கும் இதே அளவு ஆனந்தம்.*

*தேவ லோகத்தில் உள்ள 100 மடங்கு ஆனந்தம் = இந்திரனின் ஆனந்தம் = தேவ லோகத்தில் வைராக்கியம் உள்ள மனிதனின் ஆனந்தம்.*

*இந்திரனின் நூறு மடங்கு ஆனந்தம் = பிருகஸ்பதியின் ஆனந்தம் = இந்திரனின் ஆனந்தத்தில் வைராக்கியம் உடைய மனிதனின் ஆனந்தம்.*

*பிருகஸ்பதியின் நூறு மடங்கு ஆனந்தம் = பிரஜாபதியில் (விராட் புருஷன்) ஆனந்தம் = பிருகஸ்பதியில் ஆனந்தத்தில் வைராக்கியம் உள்ள மனிதனின் ஆனந்தம்.*

*பிரஜாபதியின் நூறு மடங்கு ஆனந்தம் = பிரம்மாவின் (ஹிரண்யகர்ப்பன்) ஆனந்தம் = பிரஜாபதியின் ஆனந்தத்தில் வைராக்கியம் உள்ள மனிதனின் ஆனந்தம்.*

**அனுவாகம்** – *8.3*
===============

*ஆனந்த மீமாம்ஸத்தின் மூலமாக பிரதிபிம்பானந்தம் எடுத்துரைக்கப்பட்டது. ஜீவ – ஈஸ்வர ஐக்கியம் ஆனந்தத்தின் மூலமாக நிரூபிக்கபட்டிருக்கின்றது.*

மனிதனிடத்தில் இருக்கும் ஆனந்தமும், ஹிரண்யகர்ப்பனிடத்தில் இருக்கும் ஆனந்தமும் ஒன்றே.

இந்த ஆனந்தத்திற்கு காரணம் ஆனந்த ஸ்வரூபமாக இருக்கும் ஆத்மாவேதான். அது இரண்டற்றது என்று புரிந்து கொள்ள முடிகின்றது.

இந்த ஞானத்தை அடைந்தவனுக்கு வரும் மனநிறைவே மோட்சம் என்று கூறப்படுகின்றது. இங்கே ஆனந்தம் அனுபவமாக இருக்காது, ஸ்வரூபமாக இருக்கும். ஹிரண்யகர்ப்பனின் ஆனந்தத்தை வைராக்கியத்தோடு விலக்கி விட்டால் அடைவது பிரம்ம ஞானம், இதுவே ஜீவன் முக்தி என்றும் கூறப்படுகின்றது.

மனிதனின் இதயக்குகையில் இருக்கின்ற ஆத்மா, நம்முடைய அனுபவத்தில் இருக்கின்ற நான் என்ற ஆத்மா, உடலுக்குள் நுழைந்து இருக்கின்ற ஆத்மா.

இதுவும் மாயைக்கு ஆதாரமாக இருக்கின்றதும், இந்த ஜகத்துக்கு ஆதாரமாக இருக்கின்றதும், ஹிரண்ய-கர்ப்பனிடத்திலும் இருக்கின்றதுமான ஆத்மாவும் ஒன்றுதான் என்று ஐக்கியப்படுத்தப்பட்டுள்ளது.

எவனொருவன் இவ்விதம் ஜீவ – ஈஸ்வர ஐக்கியத்தை அறிகின்றனோ, அவன் இந்த உலகத்திலிருந்து விலகி, அதன் மீது வைராக்கியம் அடைந்து, உலகத்து விஷயங்களை சார்ந்தில்லாமல்

என்னுடையது என்ற புத்தியை விட்டு விடுகின்றான்.

தான் உபயோகிக்கும் பொருள் என்னுடையது என்ற புத்தியில்லாமல் அனுபவிக்கின்றான்.; இந்த ஸ்தூல சரீரத்தை ஆத்மா என்று நினைத்துக் கொண்டிருந்த அகங்காரத்தை துறக்கின்றான்.

ஸ்தூல பிரபஞ்சத்தையே துறக்கின்றான். இது மித்யா என்று புரிந்து கொள்கின்றான், இந்த ஜகத் உண்மைபோல் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றது என்ற அறிவுடன் இருக்கின்றான்.

மேலும் பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம் ஆனந்தமயம் இவைகளிலுள்ள அகங்காரத்தை விட்டவனாக இருக்கின்றான்.

இறுதியில் பிரம்மத்தையே அடைகின்றான், பிரம்மனாகவே இருக்கின்றான். இந்த விஷயத்தில் ரிக் மந்திரம் பின்வருமாறு விளக்குகின்றது.

இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது ஞானிதான் பிரம்மத்தை அடைகின்றான். அக்ஞானி பிரம்ம ஸ்வரூபமாக இருந்தாலும் அதை அறியாமலிருப்பதால் பிரம்மத்தை அடைவதில்லை.

எல்லோரும் உலகத்தை இரண்டாக பிரித்திருக்கின்றனர்.

அவைகள்

1. என்னுடையது.
2. என்னுடையதல்ல என்பதாகும்.

இதில் இரண்டாவதுதான் மிகப்பெரியதாக இருக்கின்றது.

இந்த பிரிவினால்தான் நாம் துயரத்தை அனுபவித்து கொண்டிருக்கின்றோம்.

அனுவாகம் - 9.1
===============

ஸ யச்சாயம் புருஷே | யச்சாஸாவாதித்யே | ஸ ஏக: | ஸ ய ஏவம் வித் | அஸ்மாத் லோகாத் ப்ரேத்ய | ஏதம் அன்னமய மாத்மானம் உபஸ்ங்க்ராமதி | ஏதம் ப்ராணமயமாத்மானம் உபஸங்க்ராமதி | ஏதம் மனோமயமத்மானம் உபஸங்க்ராமதி | ஏதம் விஜ்ஞானமயமாத்மானம் உபஸங்க்ராமதி | ஏதம் அனந்தமயமாத்மானம் உபஸங்க்ராமதி | ததப்யேஷ ச்லோகோ பவதி ||

வாக்கும் மனமும் பிரம்மத்தை அடைய முடியாமல், விளக்க முடியாமல் திரும்பி வந்து விட்டது. இதிலிருந்து நாம் அறிவது வாக்காலும், மனதாலும் இதை அடைய முடியாது.

*வாச்யார்த்தம் என்பது நேரிடையாக புரிய வைக்கும், லட்சியார்த்தமானது மறைமுகமாக புரியவைக்கும்.*

*பிரம்மத்தினுடைய ஆனந்த ஸ்வரூபத்தை அறிபவன், ஆத்மாவிலிருந்து வேறுபடாத தன்னுடைய ஆனந்த ஸ்வருபத்தை அறிந்தவன், எதைக்கண்டும் பயமில்லாதவனாகவும், பயம் என்பதே இல்லாமல் இருப்பவன். ஏனென்றால், பயத்தைக் கொடுக்கும் காரணம் சென்று விடுவதால்.*

***அனுவாகம் - 9.2***
------------------

***யதோ வாசோ நிவர்த்தந்தே | அப்ராப்ய மனஸா ஸஹ | ஆனந்தம் ப்ரஹ்மணோ வித்வான் | ந பிபேதி குதச்சனேதி | ஏதக்ம் ஹ வா வ ந தபதி கிமஹக்ம் ஸாது நாகரவம் | கிமஹம் பாபமகரவமிதி | ஸ ய ஏவம் வித்வானேதே ஆத்மானக்க்ம் ஸ்ப்ருணுதே | ய ஏவம் வேத | இத்யுபநிஷத் ||***

*ஞானியானவன், நான் ஏன் நல்லது செய்யவில்லை, நான் ஏன் பாவத்தை செய்தேன் போன்ற எண்ணங்களால் துயரங்கள் வாட்டுவதில்லை. இவன் தன்னிடத்திலே திருப்தியாக இருப்பவன், தன்னிடத்திலே குறையை பார்க்காமலிருப்பவன். பாவ - புண்ணியங்களை தன்னிடமிருந்து வேறாக பார்ப்பதில்லை.*

த்வைத ஞானம் அவனிடத்தில் இல்லாததால் அவனால் இவ்வாறாக நினைக்க முடிகின்றது. அதனால் எந்த துயத்தையும் அனுபவிப்பதில்லை. நாம் நம்மையே நேசிக்க ஆரம்பித்துவிட்டால் யாருடைய அன்பையும் எதிர்ப்பார்க்கமாட்டோம், கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும் மகிழ்ச்சியோ, வருத்தமோ அடைய மாட்டான். அவன் அடைந்த ஞானத்தில் நிலைத்து நிற்கும் அளவுக்கு மனோபலத்தை அடைந்திருக்கின்றான்.

ஞானியில் அந்தக்கரணம் ராக – துவேஷங்களால் பாதிக்கப்படுவதில்லை. மேலும் அப்படி வெளிப்படும் இவைகள் தன்னுடையதல்ல, அது அந்தக்கரணத்தைச் சார்ந்தது, நான் வெறும் சாட்சியாக மட்டும் இருக்கின்றேன் என்ற நிலையில் இருப்பான். எப்படி வேறொருவன் மனிதில் வெளிப்படும் ராக – துவேஷங்கள் நம்மை பாதிப்பதில்லையோ அதேப்போன்று இருக்கும் ஞானியின் மனநிலை.

இவ்விதம் ரிக் மந்திரம் முடிவடைகின்றது.

முடிவுரை:
========

- பிரஹ்மவித் ஆப்னோதி பரம் என்ற சூத்திர வாக்கியம் கூறப்பட்டது.

- விருத்தி வாக்கியமான “ஸத்யம், ஞானம், அனந்தம் பிரஹ்ம….ப்ரஹ்மனா விபஸ்சிதா” விளக்கப்பட்டது.

- அத்யாரோப - அபவாதம் முறையில் ப்ரஹ்மத்தை விளக்கப்பட்டது.

- ஸ்ருஷ்டியானது பிரம்மத்தின் மீது ஏற்றி வைக்கப்பட்டது.

- ஏற்றி வைத்ததையெல்லாம் ஒவ்வொன்றாக பஞ்சகோஷம் விவேகம் மூலமாக நீக்கப்பட்டது. இதில் சமஷ்டி - வியஷ்டி இரண்டையும் நீக்குதலையும் உபதேசிக்கபட்டது.

- இந்த பிரபஞ்சத்தை நீக்கி நிர்குண பிரம்மத்தை உபதேசித்தது.

- ஜகத் மித்யா என்பதையும் பிரஹ்மம் ஸத்யம் என்பதையும் நிரூபிக்க இந்த முறையை கையாளப்பட்டது.

- பிரம்மன் இருக்கின்றது என்பதை ஏழு வித்த்தில் உபதேசிக்கப்பட்டது.

- ஆனந்த மீமாம்ஸா அதாவது ஆனந்த விசாரம் செய்யப்பட்டது.

- ஆத்மா ஆனந்த ஸ்வரூபம் என்று நிலை நாட்டுவதற்கும், நம் அனுபவத்தில் ஆனந்தம் வெளியேயிருந்து வருகின்றது என்ற தவறான புரிதல் உள்ளதால் இந்த விசாரம் செய்யப்பட்டது.

- வைராக்கியத்தின் பெருமையை உணர்த்துவதற்காக மனதில் ஆசைகள் நீங்க நீங்க அமைதியும் அதிகரிக்கும், அதனால் ஆனந்தம் அதிகரிக்கும் என்று கூறப்பட்டது. ஆனந்தமே விஷயானந்தம், வைராக்கியானந்தம், ஆத்மானந்தம் என்று மூன்று வகையாக பிரிக்கப்பட்டது.

- ஜீவ – ஈஸ்வர ஐக்கியமும் உபதேசிக்கப்பட்டது.

- இதன் பலனாக எதைக் கண்டும் பயப்படுவதில்லை. பயமும் அதற்கான காரணமும் சேர்ந்து நீங்கி விடுகின்றது. அஹம் பிரம்மம் என்ற பேருண்மை புரிகின்றது.

# *அத்தியாயம் - 3*

## *(பிருகு வல்லீ)*

*அனுவாகம் - 1*
==============

***ப்ருகுர்வை வாருணி: | வருணம் பிதரமுபஸஸார | அதீஹி பகவோ ப்ரஹ்மேதி | தஸ்மா ஏதத் ப்ரோவாச | அன்னம் ப்ராணம் சக்ஷு:ச்ச்ரோத்ரம் மனோ வாசமிதி ||***

*வருணரின் மகனான வாருணி என்கின்ற ப்ருகு ரிஷி, தந்தையாகிய வருணரை அணுகினார். இறைவா, எனக்கு பிரம்மத்தை உபதேசியுங்கள் என்று கேட்டார்.*

*இதிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டியது, வேதாந்தம் படிப்பதற்கு குரு மிகவும் அவசியம், ஞானத்தின் பெருமையும் உணர்த்தப்படுகின்றது, தவத்தில் சிறந்த ரிஷியான இவரே ஞானத்தை அடைவதற்கு விரும்பினார் என்பதிலிருந்து நாம் புரிந்து கொள்ளலாம்.*

*சில சாதனங்களை இந்தக் கதை மூலம் அறிந்து கொள்ளலாம்.*

*தந்தையையே குருவாக பாவித்து, அவரை இறைவா என்று அழைத்தது அவரிடம் உள்ள பணிவை காட்டுகின்றது.*

*ப்ருகுவுக்கு சில தத்துவங்களை உபதேசித்தார். ஜீவாத்மா அடைய சில வழிகளை உபதேசித்தார், த்வம் பதத்தை அறிந்து கொள்ள சில உபாயங்களை உபதேசித்தார்.*

அவைகள்

*அன்னமயகோசம், பிராணமயகோசம், கண், காது, மனது, வாசம் (மனோமயகோசம்). பிறகு மீண்டும் கூறலானார்.*

*எதனிடமிருந்து இந்த ஜீவராசிகள் தோன்றியுள்ளதோ, எதனால் இவைகள் வாழ்கின்றனவோ, எதனிடத்தில் இறந்ததும் சென்றடைகின்றனவோ அதை தெளிவாக அறிய முயற்சிப்பாயாக, அதுவே பிரம்மன்.*

*இவ்விதம் கேட்டபிறகு ப்ருகு தவத்தை மேற்கொண்டார். தவத்தை செய்துவிட்டு மீண்டும் குருவை அடைந்தார்.*

***விசாரம்:***

=======

- அவரே ரிஷியாக இருப்பதால் இதை தவம் செய்துதான் அறிந்து கொள்ள முடியும் என்று அறிந்திருக்கின்றார், எதை அடைய வேண்டுமென்றாலும் தவம் செய்து முயற்சிக்க வேண்டும். நாம் செய்யும் தியாகங்களையும் தவத்தில் சேர்க்கலாம். இவைகள் ரிஷிகளுக்கு தெரிந்திருப்பதால் அவர் தவத்தை மேற்கொண்டார்.

- தவம் என்றால் என்ன? ஒவ்வொரு ஆசிரமத்திலும் அவரவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய கர்மங்களை சொல்லப்பட்டிருகின்றது. இவைகளையே தவம் என்று அழைக்கப்படுகின்றது.

- ***பிரம்மச்சர்யம்*** – ஸ்வாத்யாயம் – சாஸ்திரங்களை படித்தல்.

- ***கிருஹாஸ்ரமம்*** – தானம் செய்வதுதான் தவம்.

- ***வானப்ரஸ்தாசிரமம்*** – விரதம் இருப்பதைக் காட்டிலும் பெரிய தவம் வேறெதுவும் இல்லை.

- ***சந்நியாஸம்*** – மனம், இந்திரியங்கள் கட்டுப்பாடு மேலான தவம்.

*இந்த கதையில் ப்ருகு ரிஷி இந்திரியங்கள் மனம் இவைகளைக் கட்டுபடுத்தும் தவத்தில் ஈடுபட்டார். மீண்டும், மீண்டும் சிந்தித்தார், விசாரத்தில் ஈடுபட்டார்.*

***அனுவாகம் - 2***

==============

***அன்னம் ப்ரஹ்மேதி வ்யஜானாத் | அன்னாத்யேவ கல்விமானி பூதானி ஜாயந்தே | அன்னேன ஜாதானி ஜீவந்தி | அன்னம் ப்ரயந்த்யபிஸம்விசந்தீதி | தத் விஜ்ஞாய | புனரேவ வருணம் பிதரமுபஸஸார | அதீஹி பகவோ ப்ரஹ்மேதி | தக்ம் ஹோவாச | தபஸா ப்ரஹ்ம விஜிஜ்ஞாஸஸ்வ | தபோ ப்ரஹ்மேதி | ஸ தபோதப்யத | ஸ தபஸ் தப்த்வா ||***

*அன்னம்தான் பிரம்மனென்று முடிவு செய்தார். இங்கே அன்னம் என்பதை விராட் தத்துவத்தை புரிந்து கொள்ள வேண்டும்.*

*இந்த ஸ்தூல பிரபஞ்சத்தை அவர் குறிபிட்டதாக எடுத்துக் கொள்ள வேண்டும். உணவிலிருந்துதான் இந்த ஜீவராசிகளின் சரீரங்கள் தோன்றுகின்றன. உணவினால் தோன்றி வாழ்கின்றன. உணவிடத்தில் இறுதியாக லயத்தை அடைகின்றன. இவ்விதமாக பிரம்மத்தை அன்னமாக கருதினார்.*

*பிறகு அதையே மீண்டும் விசாரம் செய்து அன்னத்திற்கு இந்த பிரம்ம ஸ்வரூப லக்ஷணம்*

பொருந்தவில்லை என்று உணர்ந்தார். அன்னமானது மாற்றத்தை அடைவதை உணர்ந்தார்.

இது வரையறுக்குட்பட்டது ஆகவே இது பிரம்மனாக இருக்க முடியாது என்ற முடிவுக்கு வந்தார், மீண்டும் தந்தையான குருவை அடைந்தார்.

பகவானே, மீண்டும் பிரம்மனை உபதேசிப்பீர்களாக என்று வேண்டினார். அவரும் தவத்தை செய்து தெரிந்து கொள்.

தவமே பிரம்மத்தை அடைய உதவும் சாதனம் என்று உணர்த்தினார். இங்கே தவம் என்ற சொல் மனக்கட்டுப்பாட்டை குறிக்கின்றது, வெளியே செல்கின்ற மனதை உட்புறமாக திருப்ப வேண்டும். ப்ருகு தவத்தை மேற்கொண்டார்.

**அனுவாகம் – 3**
=============

***ப்ராணோ ப்ரஹ்மேதி வ்யஜானாத் | ப்ராணாத்யேவ கல்விமானி பூதானி ஜாயந்தே | ப்ராணேன ஜாதானி ஜீவந்தி | ப்ராணம் ப்ரயந்த்யபிஸம்விசந்தீதி | தத்விஜ்ஞாய | புனரேவ வருணம் பிதரமுபஸஸார | அதீஹி பகவோ ப்ரஹ்மேதி | தக்ம் ஹோவாச | தபஸா ப்ரஹ்ம விஜிஜ்ஞாஸஸ்வ | தபோ ப்ரஹ்மேதி | ஸ தபோதப்யத | ஸ தபஸ் தப்த்வா ||***

*பிராணனே (சூட்சும சரீர அபிமானி ஹிரண்யகர்ப்பன்) பிரம்மன் என்று முடிவுக்கு வந்தார்.*

*பிராணனிலிருந்து ஜீவராசிகள் தோன்றுகின்றன. பிராணனினால் வாழ்கின்றன, இறுதியில் பிராணனை அடைகின்றன. என்ற ஸ்வரூப லட்சணை விசாரம் செய்தார். இந்த லட்சணம் பிராணனில் பொருந்தவில்லை எனவே இது பிரம்மன் அல்ல என்ற முடிவுக்கு வந்தார்.*

*எனவே மீண்டும் தந்தையை அணுகினார். மீண்டும் உபதேசம் செய்யுமாறு கேட்க, அவரும் மீண்டும் தவம் செய்து அறிந்து கொள் என்பதையே அவரும் சொல்லியனுப்பினார்.*

**அனுவாகம் - 4**
==============

***மனோ ப்ரஹ்மேதி வ்யஜானாத் | மனஸோ ஹ்யேவ கல்விமானி பூதானி ஜாயந்தே | மனஸா ஜாதானி ஜீவந்தி | மன: ப்ரயந்த்யபி ஸம்விசந்தீதி | தத்விஜ்ஞாய | புனரேவ வருணம் பிதரமுபஸஸார | அதீஹி பகவோ ப்ரஹ்மேதி | தக்ம் ஹோவாச | தபஸா ப்ரஹ்ம விஜிஜ்ஞாஸஸ்வ | தபோ ப்ரஹ்மேதி | ஸ தபோதப்யத | ஸ தபஸ்தப்த்வா ||***

*மனமே பிரம்மன் முடிவுக்கு வந்தார்.*

*பிரம்ம தடஸ்த லட்சணத்தை பொருத்திப் பார்த்து இதுவல்ல என்ற முடிவுக்கு வந்தார். மீண்டும் விசாரம் செய்து இதுவும் பிரம்மனல்ல என்று அறிந்து கொண்டார்.*

**அனுவாகம் - 5**

=============

**விஜ்ஞானம் ப்ரஹ்மேதி வ்யஜானாத் |
விஜ்ஞானாத்யேவ கல்விமானி பூதானி ஜாயந்தே |
விஜ்ஞானேன ஜாதானி ஜீவந்தி | விஜ்க்ஞானம் ப்ரயந்த்யபி ஸம்விசந்தீதி | தத்விஜ்ஞாய | புனரேவ வருணம் பிதரமுபஸஸார | அதீஹி பகவோ ப்ரஹ்மேதி | தக்ம் ஹோவாச | தபஸா ப்ரஹ்ம விஜிஜ்ஞாஸஸ்வ | தபோ ப்ரஹ்மேதி | ஸ தபோதப்யத | ஸ தபஸ் தப்த்வா ||**

*விக்ஞானமயமே பிரம்மன் அதாவது புத்தியே கடவுள் என்ற முடிவுக்கு வந்தார்.*

*இவ்வாறு மீண்டும் உபநிஷத் சொல்வதற்குக் காரணம், தவத்தின் பெருமையை எடுத்துரைப்பதற்கு இந்த முறையில் உபதேசிக்கபடுகின்றது.*

*இதேபோல ஆனந்தமயத்தை தவத்தின் மூலம் பிரம்மன் என்ற முடிவுக்கு வந்தார்.*

*ஆனால் இது போக்தாவாக இருப்பதால் இதுவும் பிரம்மனல்ல என்று அறிந்து கொண்டார். போக்தாவும் விகாரத்திற்கு உட்பட்டதாக இருப்பதால் பிரம்மனல்ல என்று தெரிந்து கொண்டார்.*

**அனுவாகம் - *6***

==============

***ஆனந்தோ ப்ரஹ்மேதி வ்யஜானாத் |***
***ஆனந்தாத்யேவ கல்விமானி பூதானி ஜாயந்தே |***
***ஆனந்தேன ஜாதானி ஜீவந்தி | ஆனந்தம் ப்ரயந்த்யபிஸம்விசந்தீதி ||***

*ஆனந்தமே பிரம்மன் என்று புரிந்துக் கொண்டார்.*

*இந்த ஜீவராசிகள் ஆனந்தத்திலிருந்து தோன்றின. அதிலேயே வாழ்கின்றன. இறுதியில் அதிலேயே லயமடைகின்றது, ஒடுங்குகின்றது.*

*இவ்விதம் ப்ருகு புரிந்து கொண்டார்.*

*இந்த ப்ரஹ்மஞானம் ப்ருகு என்பவரால் புரிந்து கொள்ளப்பட்டது. வருணரால் உபதேசிக்கபட்டது.*

*மனிதனின் ஹ்ருதயத்தில் உள்ள மேலான ஆகாசத்தில் இருக்கின்ற பிரஹ்மத்தினிடத்தில் பரா வித்யாவானது அறிந்தவுடன் முடிவடைகின்றது.*

யாரொருவன் ப்ருகு புரிந்து கொண்டதைப்போல அறிகின்றார்களோ அவர்கள் ப்ரஹ்மனிடத்தில் நிலைபெறுகின்றார்கள், தன்னிடத்திலே நிலைபெறுகின்றார்கள்.

அவனுக்கு நல்ல உணவு வேண்டிய அளவு கிடைக்கும். உணவை நன்கு உட்கொள்ளும் சக்தியுடையவனாகவும் இருக்கின்றான். மேன்மையை அடைகின்றான்.

நல்ல சந்ததிகளினாலும், சிஷ்யர்களாலும் பெருமையடைவார். செல்வங்களை உடையவனாகவும், தேஜஸ் உடையவனாகவும், புகழினாலும் மேன்மையை அடைகின்றான்.

**அனுவாகம்** - 7

=============

அக்ஞானிகளுக்கான உபாஸனையும், சில நல்ல பண்புகள் இதில் சொல்லப்படுகின்றது. உணவை அவமதிக்கக்கூடாது. அதை விரதமான பின்பற்ற வேண்டும், அன்னம் என்பது விராட் ஸ்வரூபம், ஸமஷ்டி ஸ்தூல சரீரத்தையுடைய ஈஸ்வரன். அன்னத்தின் உதவியால்தான் அன்னமயகோசம் இருக்கின்றது. இந்த கோசம் பிரம்மத்தை அடைவதற்கு ஒரு படியாக இருக்கின்றது.

*உபாஸனை:*
==========

*இந்த உலகத்திலுள்ள அனைத்தும் ஒன்றையொன்று சார்ந்திருக்கின்றது. எந்தவொரு தத்துவமும் சுதந்திரமாக இருக்க முடியாது. உதாரணமாக சரீரமானது பிராணனை சார்ந்திருக்கின்றது, அதேபோல பிராணனானது சரீரத்தை சார்ந்திருக்கின்றது என்று தியானிக்க வேண்டும். இந்த உலகத்தின் மித்யாத்வம் உணராதவர்களுக்கு இந்த ஞானம் பயன்படுகின்றது. இந்த தியானத்தின் மூலம் இந்த பிரபஞ்சம் மித்யா என்று உணர்ந்து கொள்வான். எது ஒன்றை சார்ந்திருக்கின்றதோ அது மித்யாவின் லக்ஷணம். இந்த நிலை அடைந்தும் வேதாந்தம் புரிய ஆரம்பிக்கும். இது நிஷ்காம உபாஸகன் அடையும் பலன். காம்ய உபாஸகனுக்கு வேறு வகையான பலன்கள் கிடைக்கின்றது. நல்ல உணவு கிடைக்கும், உணவு உட்கொள்ளும் சக்தி கிடைக்கும், தேஜஸ், புகழ் கிடைக்கும்.*

*அன்ன-அன்னாத உபாஸனை:*
=========================

*அன்னம் – எது சாப்பிடபடுகின்றதோ – உணவு அன்னாத – எது சாப்பிடுகின்றதோ – சாப்பிடுபவர், இதில் இரண்டு தத்துவங்கள் எடுத்துக்கொண்டு விளக்கப்படுகின்றது.*



அவைகள் சரீரம் – பிராணன்.

பிராணன் என்பது அன்னம், சரீரம் அன்னாதம், உடலானது பிராணனை சாப்பிடுகின்றது, இதற்கு பொருள் சரீரம் பிராணனை சார்ந்திருக்கின்றது. பிராணனை தனக்குள்ளே வைத்திருப்பதால் சரீரம் ஒரு பாத்திரமாக இருக்கின்றது, பிராணன் அதில் வைக்கப்படும் பொருளாக இருக்கின்றது.

சரீரம் என்பது அன்னம், பிராணன் அன்னாதம், பிராணன் உடலை சாப்பிடுகின்றது, பிராணன் உடலை சார்ந்திருக்கின்றது.

இதில் பிராணன் ஒடுக்குபவராகவும், சரீரம் ஒடுங்குகின்ற பொருளாகவும்,இருக்கின்றது. இதனால் பிராணமயகோசம் அன்னமய கோசத்தை நீக்கி விடுகின்றது.

*ஒரு பொருள் இருக்கும்போதும், இல்லாதபோதும் நம்முடைய மனமானது எந்த பாதிப்பும் அடையாமலிருந்தால் அந்தப்பொருளின் மித்யாத்வத்தை உணர்ந்துள்ளோம் என்று அறிந்து கொள்ளலாம்.*

*பிரதிஷ்டா - பிரதிஷ்டித உபாஸனை:*
==================================

*பிராணத்தினால் சரீரம் தாங்கப்படுகின்றது. பிராணனானது உடலுக்கு உயிரூட்டுகின்றது. எனவே இது பிரதிஷ்டா, சரீரம் உயிரை அடைவதால் அது பிரதிஷ்டிதம்.*

*சரீரத்தினால் பிராணன் தாங்கப்படுகின்றது. சரீரமானது பிராணன் இருப்பதற்கு பாத்திரமாக இருப்பதால் அது பிரதிஷ்டா, பிராணனானது சரீரத்திற்குள்ளே இருப்பதால் அது பிரதிஷ்டிதம்.*

*இவ்விதம் சரீர ரூபமாக இருக்கின்ற அன்னம், பிராண ரூபமாக இருக்கின்ற அன்னத்தினால் தாங்கப்படுகின்றது. யார் இந்த அன்னம் அன்னத்தை சார்ந்திருக்கின்றது என்பதை அறிகின்றார்களோ, அவர்கள் நீண்ட ஆயுளுடன் இருப்பார்கள்.*

*நிஷ்காம மாக இந்த உபாஸனை செய்தால் இந்த ஜகத் மித்யா (உலகம் பொய்) என்ற அறிவை அடையலாம்.*

காம்யமாக செய்பவர்களுக்கு அதிகமான உணவு கிடைக்கும், அதை சாப்பிடும் சக்தியும் கிடைக்கும், நல்ல சந்ததிகளாலும், செல்வங்களாலும், புகழினாலும் மேன்மையை அடைகின்றான்.

**அனுவாகம் - 8**
=============

**அன்னம் ந பரிசக்ஷீத | தத் வ்ரதம் | ஆபோ வா அன்னம் | ஜ்யோதிரன்னாதம் | அப்ஸூ ஜ்யோதி: ப்ரதிஷ்ட்டிதம் | ஜ்யோதிஷ்யாப: ப்ரதிஷ்ட்டிதா: | ததேதன்னமன்னே ப்ரதிஷ்ட்டிதம் | ஸ ய ஏதன்னமன்னே ப்ரதிஷ்ட்டிதம் வேத ப்ரதிஷ்ட்டதி | அன்னவானன்னாதோ பவதி | மஹான் பவதி ப்ரஜயா பசுபிர் ப்ரஹ்ம வர்ச்சஸேன | மஹான் கீர்த்யா ||**

உணவை வீணாக்கக்கூடாது அதை ஒரு விரதமாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

நீரானது அன்னமாக (சாப்பிடப்படுகின்ற உணவாக) இருக்கின்றது. நெருப்பானது அன்னாதமாக (சாப்பிடுபவராக) இருக்கின்றது. பிரளய காலத்தில் நீரானது நெருப்பினால் விழுங்கப்படுகின்றது.

நெருப்பானது அன்னமாக (சாப்பிடப்படுகின்ற உணவாக) இருக்கின்றது, நீரானது அன்னாதமாக (சாப்பிடுபவராக) தியானிக்கபடுகின்றது; வயிற்றில்

*பசி எடுக்கும்போது தோன்றும் நெருப்பானது நீரினால் அமைதிப் படுத்தப்படுகின்றது.*

*நீரினால் நெருப்பானது கட்டுப்படுத்தப்படுகின்றது. அப்போது நீர் பிரதிஷ்டாவாகவும் (கட்டுபடுத்துபவர்), நெருப்பு பிரதிஷ்டிதமாகவும் (கட்டுப்படுத்தபடுவதால்) இருக்கின்றது. நெருப்பினால் நீர் கட்டுபடுத்தபடுகின்றது. இதில் நெருப்பானது பிரதிஷ்டாகவும், நீரானது பிரதிஷ்டிதமாகவும் இருக்கின்றது.*

*இவ்வாறு தியானம் செய்வதால் முன் அனுவாகத்தில் சொல்லப்பட்ட பலன்களையே அடைவார்கள்.*

**அனுவாகம்** *– 9*

==============

*உணவுப் பொருட்களை அதிகமாக சேகரித்து, அதிகமாக சமைக்க வேண்டும்.*

*இங்கு நிலமும், ஆகாசமும் தியானத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றது.*

*நிலம் – அன்னம் – ஒடுங்குபவர் – பிரளய காலத்தில் நிலம் ஆகாசத்தில்*

*ஆகாசம் – அன்னாதம் – ஒடுக்குபவர் – ஒடுங்குகின்றது*

ஆகாசம் – அன்னம் – ஒடுங்குபவர் – வயிற்றுக்குள் இருக்கும் ஆகாசம்

நிலம் – அன்னாதம் – ஒடுக்குபவர் – நிலத்தினால் தாங்கப்படுகின்றது

நிலம் பிரதிஷ்டா தாங்குபவர்

ஆகாசம் பிரதிஷ்டிதம் தாங்கப்படுவது

நிலம் பிரதிஷ்டிதம் காரியம்

ஆகாசம் பிரதிஷ்டா காரணம்

இப்படி தியானிப்பதால் அனுவாகம்-7 ல் கூறப்பட்ட பலன்களையே அடைவர்.

**அனுவாகம்** – 10.1
================

ஒருவர் நம்மிடம் இருப்பிடம் நாடி வந்தால் நாம் மறுக்க கூடாது, இதை விரதமாக கொள்ள வேண்டும், அவருக்கும் தங்க இடமும், சாப்பிட உணவும் கொடுக்க வேண்டும்.

ஆகவே ஏதாவது ஒரு விதத்தில் தர்மப்படி அதிகமான உணவை சேகரிக்க வேண்டும். இவருக்கு உணவு

தயாராக உள்ளது என்று இல்லறத்தோர் கூறுகிறார்கள்.



உயர்ந்த விதத்தில் உணவை தயாரித்து கொடுத்தால் அவனுக்கும் உயர்ந்த விதத்தில் உணவானது கிடைக்கின்றது. இடைநிலை தரத்தில் தயாரித்து கொடுத்தோமானல் அதே தரத்தில்தான் உணவும் திரும்ப கிடைக்கும். ஒருவேளை மோசமாக உணவை தயாரித்து கொடுத்தோமானால் நமக்கும் மோசமான உணவே கிடைக்கும்.

இங்கு உணவு ஒரு உதாரணத்திற்கு கூறப்பட்டுள்ளது. இந்த கருத்தை எல்லாவற்றிற்கும் பொருத்திப் பார்த்து புரிந்து கொள்ள வேண்டும். யார் இந்த உண்மையை அறிந்து அவ்விதம் நடந்து கொள்கிறார்களோ அவர்கள் புண்ணியத்தை அடைகின்றார்கள்.

இந்த உலகத்திற்கு நாம் எதைக் கொடுக்கின்றோமோ அதை இந்த உலகம் நமக்கு திருப்பிக் கொடுக்கும். எப்படி கொடுத்தோமோ அப்படியே திருப்பி கொடுக்கும்.



உணவைக் கொடுத்தால் நமக்கு உணவு கிடைக்கும், அன்பைக் கொடுத்தால் நமக்கும் அன்பு கிடைக்கும்.

அனுவாகம் - 10.2
================

பிரஹ்ம உபாஸனம்
=================

மாயையுடன் கூடிய பிரம்மன் சகுணபிரம்மன் என்றும், ஈஸ்வரன் என்றும் அழைக்கப்படுகின்றது. உபாஸனை வரும் இடத்தின் பிரம்மன் என்பதை ஈஸ்வரன் என்று எடுத்துக்கொள்ள வேண்டும்.

*நம்முடைய சரீரத்தில் உள்ள ஒவ்வொரு அங்கத்திற்கும் ஒவ்வொரு சக்தி இருக்கின்றது. நாம் இந்த சக்திகள் என்னைச் சார்ந்தது என்று நினைத்துக் கொண்டிருக்கின்றோம். ஆனால் இவையனைத்தும் ஈஸ்வரனுடைய சக்தி என்று தியானிக்க வேண்டும்.*

1. *க்ஷேம இதி வாசி: நம்முடைய வாக்கில் தூய்மைரூபமாக ஈஸ்வரன் இருக்கின்றார் என்று தியானிக்க வேண்டும். ஒரு மனிதனுடைய உயர்வும், தாழ்வும் அவனுடைய சொல்லில்தான் இருக்கின்றது என்ற உண்மையை புரிந்து கொள்ள வேண்டும்.*

2. *யோகக்ஷேம இதி பிராண-அபானயே: பிராணன் — அபானன் இவைகளில் யோகக்ஷேமமாக இருப்பதாக தியானிக்க வேண்டும். யோகம் என்பது பொருள் ஈட்டுதல், க்ஷேமம் என்பது சேர்த்ததை பாதுகாத்தல்.*

3. *நமது இரண்டு கைகளில் செயல்வடிவமாக ஈஸ்வரன் இருப்பதாக தியானிக்க வேண்டும்.*

4. *நமது இரண்டு கால்களில் நடக்கின்ற சக்தியாக இருப்பதாக தியானிக்க வேண்டும்.*

5. மலத்தை வெளியே தள்ளும் இந்திரியத்தில் வெளித்தள்ளும் சக்தியாக தியானிக்க வேண்டும்.

6. கருவாயில் உற்பத்தி செய்யும் சக்தியாகவும், அம்ருதமாகவும், சந்ததி உருவாகுவதற்கு காரணமாகவும், சரீர ஆனந்தத்தை தருகின்ற சக்தியாகவும் தியானிக்க வேண்டும்.

இவ்விதம் மனிதர்களுடைய உறுப்புக்கள் சம்பந்தமான உபாஸனைகள் சொல்லப்பட்டு உள்ளது.

**அனுவாகம் - 10.3**
=================

பிரம்மனை மழையில் திருப்தியாகவும், மின்னலில் சக்தியாகவும், செல்வத்தில் புகழாகவும், நட்சத்திரங்களில் (சூரியன், சந்திரன் இரண்டும் நட்சத்திரங்களுடன் சேர்த்து பார்க்க வேண்டும்) ஒளிவடிவமாக இருக்கின்றதாகவும், ஆகாசத்தில் பிரம்மத்தை அனைத்துமாக இருக்கின்றதாகவும் தியானிக்க வேண்டும்.

நாம் எதை, எப்படி உபாஸிக்கின்றோமோ அது சம்பந்தமான பலனை அடைவோம். யாரோடு உறவு வைத்திருக்கின்றாயோ, யாராக உயர விரும்புகின்றாயோ அவராக நாம் மாறுவோம். இது இயற்கையின் விதி.

- ஆகாசத்திலிருந்து வேறுபடாத பிரஹ்மன் (ஈஸ்வரன்) அனைத்திற்கும் ஆதாரமாக இருக்கின்றார் என்று தியானித்தால் வாழ்க்கையில் உயர்ந்த நிலைக்கு செல்வதற்கான எல்லாமும் கிடைக்கும், எல்லாவிதத்திலும் உதவி கிடைக்கும்.

- பிரம்மத்தை மேன்மையானதாக உபாஸித்தால் மகானாக உயர்கின்றான்.

- பிரம்மத்தை சிந்திக்கும் சக்தியாக உபாஸித்தால் சிந்திக்கும் திறனுடையவனாகின்றான்.

- பிரம்மத்தை வணங்கத்தக்கதாக தியானிப்பதால், வசீகரிக்கும் தன்மையுடையதாக தியானித்தால் ஆசைப்படும் பொருட்கள் யாவும் வந்தடையும்.

- மிகவும் பெரியதாகவும், தியானித்தால் உயர்ந்த நிலைக்கு செல்கின்றான்.

- அழிக்கக்கூடிய சக்தியாக தியானித்தால், தன்னை அழிக்க நினைக்கும் பகைவர்கள் அழிந்து போவார்கள்.

மேற்கூறிய தியானங்களை நிஷ்காமமாக (ஆசைகளற்று) செய்தால் இந்த உலகம் மித்யா (மாயை அல்லது பொய்) என்று புரிந்து கொள்ளப்படும்.

*அனுவாகம் - 10.4*

*=================*

*எந்தவொரு. ஆனந்தம் மனிதனிடத்தில் இருக்கின்றதோ அதுவும், ஹிரண்யகர்ப்பனிடத்தில் இருக்கும் ஆனந்தமும் ஒன்றேயாகும். யார் இவ்வாறு அறிகின்றார்களோ அவர்களுக்கு வெளியே உள்ள பொருட்களிலிருந்து பற்றை விட்டுவிட்டு ஒவ்வொரு கோசத்திலிருக்கும் அபிமானத்தை நீக்கி விடுவான்.*

*இந்த அன்னமயம்தான் ஆத்மா என்ற அபிமானத்தை விட்டு, பிராணமயத்திலிருந்தும் இந்த அபிமானத்தை விட்டு, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமயத்திலிருந்தும் அபிமானங்களை விட்டுவிடுவான்.*

*அனுவாகம் - 10.5*

*================*

*(மோட்ச பலன் - ஜீவன் முக்தனின் நிலை)*

*=====================================*

*ஜீவன் முக்தன் இந்த உலகத்தில் திரிந்து கொண்டும், உலவிக் கொண்டும் இருக்கின்றான். விருப்பப்படி உணவை சாப்பிட்டுக் கொண்டு இருக்கின்றான். ஏதோ ஒரு பாடலை இசையுடன் பாடிக் கொண்டிருக்கின்றான்.*

- நாம் சாப்பிடும் உணவு அந்தக்கரணத்தைப் பாதிக்கின்றது. ஞானிக்கு இந்த நிலை கிடையாது. உணவு விஷயத்தில் அவனுக்கு எந்த நியமமும், நிஷேதமும் கிடையாது.

- ஞானியானவன் உலகமே நான் என்ற பாவனையில் இருப்பவன். எனவே நானே எல்லா உருவமாக இருக்கின்றேன் என்று கருதுவான். தான் விரும்பிய வாழ்க்கையை வாழ்வான். பிராரப்தத்தின் செயலை ஏற்றுக் கொள்வான்.

- பிரம்மத்தை பாடிக் கொண்டும், உபதேசித்துக் கொண்டும் வாழ்ந்து கொண்டிருப்பான்.

- இந்த உலகத்தை அவன் ஆச்சரியமாக பார்க்கின்றான். நடக்க முடியாத விஷயத்தை பார்த்து ஆச்சரியத்தை அடைவது போல இருக்கும் அவனது பார்வை. இந்த உலகில் நான் ஒருவன் மட்டும்தான் இருக்கின்றேன். நானே உணவாகவும், உணவை உட்கொள்பவனாகவும் இருக்கின்றேன் என்று ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டு இருப்பான்.

- நானே சாப்பிடும் பொருளாக இருக்கின்றேன் என்று ஆச்சரியத்துடன் பார்க்கின்றான்.

- நானே உணவை சாப்பிடுபவனாகவும் இருக்கின்றேன் என்று ஆச்சரியத்துடன் பார்க்கின்றான்.

* நானே இந்த இரண்டையும் சேர்த்து வைக்கின்றேன் என்றும் எண்ணிக் கொள்வான். இது ஞானியிடத்திலுள்ள ஸர்வாத்ம பாவத்தை குறிக்கின்றது என்று சங்கரர் கூறுகின்றார்.

உலகத்திற்கு நானே ஹிரண்யகர்ப்பனாக இருக்கின்றேன். தேவர்களுக்கு முன் தோன்றிய விராட் ஸ்வரூபமாகவும் இருக்கின்றேன். அம்ருதத்தின் மையமாக இருக்கின்றேன்.

பிரம்மத்தை அடைய விரும்பும் முமுக்ஷுக்களுக்கு ஆதாரமாக இருக்கின்றேன். உணவு ரூபமாக இருக்கின்ற யார் கொடுக்கின்றார்களோ அவர்களை நான் காப்பாற்றுகின்றேன். உணவு தொடர்ந்து கிடைக்கப்பெற்று வாழ்வார்கள்.

அன்னரூபமான என்னை பகிர்ந்து உண்ணாதவர்கள் அழிந்து விடுவார்கள். சூரியனின் ஒளியைப் போல நான் அனைத்துலகத்தையும் வியாபிக்கின்றேன்.

ஞானியானவன் எப்பொழுதும் முழு மனநிறைவுடன் இருக்கின்றான் என்று புரிந்து கொள்ள வேண்டும்.



*யார் இவ்விதம் அறிகின்றானோ அவன் முக்தியடைந்தவனாக கருதப்படுகின்றான்.*

*இத்துடன் தைத்திரீய உபநிஷதம் உபதேசம் நிறைவடைந்தது.*

**-------------- ஓம் தத் ஸத் ---------------**

# தைத்திரீய உபநிஷதம்



தொகுப்பு

சுவாமி பிரபஞ்சநாதன்